*Kumaraṉ*

*Āram 16, muttu 41*

*May 25, 1939*

Record no. 313

REGD. NO. M. 1823. KUMARAN WEEKLY. TELEPHONE டெலிபோன் 40

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய் முதலிய வெளிநாடு ஷ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்சு ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்தமானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும். மாதப் பதிப்பும் சேர்ந்தது. PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 16. காரைக்குடி, பிரமாதி-ஷ வைகாசி-மீ 11-உ (25—5—39) முத்து 41.

## கம்பரும்-சமயமும்

(திரு. டி. கே. சிதம்பரநாத முதலியார்)

(நமது நிருபர்)

[நேமத்தான்பட்டி திருநாவுக்கரசு வித்யாசாலையின் பதின்மூன்றும் ஆண்டுவிழாவில் திருவாளர் டி. கே. சிதம்பரநாத முதலியார் ஆற்றிய சொற்பொழிவு.]

ஒரு தேசம் முன்னேற்றமடைய அதனுடைய பாஷை முன்னேற்றமடையவேண்டும். மேல் நாட்டாரான நியூடனின் கொள்கை, டார்வினுடைய உண்மை, உலகத்திற்குப் பொதுவானவை. ஆனால் ஷேக்ஸ்பியர் அவர்களுக்கே சொந்தம்; அவர்கள் அதை விடவே முடியாது.

நாம் எதைவிட்டாலும் விட்டுவிடுவோம். தமிழை விடமாட்டோம். நளினங்கள்; தேன்போன்ற ரசம். இதை வேறெவரும் நமக்குத் தரமுடியாது. நாமே பாதுகாத்துச் சுவைத்து இன்பம் துய்க்கவேண்டும்.

கம்பர் ஒரு லௌகீகக் கவி; நாடக இயலில் சிறந்தவர். துக்கம், வீரம், காதல் எல்லாவற்றையும் எளிதில் காட்டுவார். கவியை யாராலும் இயற்ற முடியாத வகையில் செய்துள்ளார். கம்பருக்கு சமய மென்பதுண்டா என்று கேட்பார்கள். ராமாயணம் ஆடம்பரத்துக்காக ஏற்பட்ட நூல், அது சமயத்தைப்பற்றி என்ன சொல்லப் போகிறது என்று நினைப்பார்கள். சமயத்தில் இரண்டு விதம் உண்டு. ஒன்று தத்துவம்; மற்றொன்று தத்துவத்தை அனுபவிக்கிற முறை. பெரியார்கள் பல்லாயிர வருடங்களுக்கு முன்பு எப்படியோ ஒரு உண்மையைக் கண்டுவிட்டார்கள். உலகத்தில் எத்தனையோ விஷயங்களிருந்தாலும் அவை ஒன்றையே குறிக்கொண்டு நிற்கின்றன என்பதுதான் அந்த உண்மை.

கடவுள் எல்லாவற்றிலுமிருக்கிறார் என்பதைச் சொல்ல தமிழர்கள் கூசுவதேயில்லை. நம்மாழ்வார் தத்துவங்களை உணர்ந்தவர். திருவாய் மொழியில் கடவுள் ஒருவர் இருக்கிறார் என்பதைச் சொல்கிறார். உண்மை வழிபாடிருந்தால் வைஷ்ணவ சமயம் என்றால் என்ன? சைவ சமயம் என்றால் என்ன? உன் சமயம் வேறு என் சமயம் வேறு; இடையில் படுதாவைப் போடு என்கிறார்கள். அது மட்டுமா? அந்த வைஷ்ணவ சமயத்திற்குள்ளேயே இரண்டு—வடகலை தென்கலை. இந்த இரண்டிற்கு மிடையிலும் படுதாப் போடு என்கிறார்கள். எம்பெருமான் ஒருவனுள னென்றால் போதுமே; இந்தப்படுதாக் கிறுக்கு வேண்டாம்.

சாதிக்குமோ பரதத்துவத்தை
• சமயத் திருக்கை
சேதிக்குமோ ஒன்றைச் சிந்திக்குமோ
அதவனத் தேரியப்
போதிக்குமோ எங்குமோங்கிப் போதி
நிற்கும் மெய்யை பொய்யைச்
சோதிக்குமோ உங்கள்வேதம்
எங்கோன் தமிழ்ச்சொல் லெனவே.

கம்பர் ஒரு உண்மையைக் காட்டியுள்ளார். இது வான்மீகி இராமாயணத்தில் இல்லை.

வானரசேனைகள் இலங்கை வந்தன. இராவணன் மந்திரிமாரைக் கூப்பிட்டு யோசனை கேட்கிறான். விபீஷணன் சீதையை விட்டுவிட்டு யுத்தத்திலிருந்து விடுபட்டு க்ஷேமமாயிருக்கலாம் என்று அபிப்பிராயம் கூறுகிறான். ராவணன் கோப வெறி கொண்டான். "நீ ஒரு கோழை, துரோகி" என்றான். ராவணனைச் செல்வ வெறியும் காம வெறியும் சேர்ந்து கிறுக்கனாக்கின. செல்வம் வந்திட்டபோது பிறரை மதிக்கும் தன்மை மழுங்கிப் போகிறது. இதற்கொரு நல்ல சான்று பாருங்கள். ஹிரண்யனுக்கு ஞானியான பிரஹ்லாதன் பிள்ளையாகப் பிறந்தான். "உலகிலுள்ள எல்லாப் பொருள்களையும் ஒருவனிருந்து ஆட்டுவிக்கிறான். எல்லாம் கடவுள்மயம்" என்பதைக் கூறுகிறான்.

"சாணினும் உளன் ஓர்தன்மை
அணுவினைச்சத கூறிட்ட
கோணினும் உளன் மாமேருக்
குன்றினும் உளன் இந்நின்ற
தூணினும் உளன் ... ... ...

இதுதான் நாடக இயல். இதற்கு மேலும் சொல்வார்களா? தமியன் சொல்லப் பயப்படான். சொல்கிறான்

.. ......நீ சொன்ன
சொல்லினும் உளன் இத்தன்மை
காணுதி விரைவின் என்றான்
நன்றெனக் கனகன் நக்கான்."

பைத்தியக் காரத்தனமென்று சிரித்தானும் செல்வம் நிறைந்த ஹிரண்யன். இதெல்லாம் தத்துவங்கள். ஒரே வஸ்து எல்லா இடங்களிலும் வியாபித்திருக்கிறது என்பதைத் தெரிவித்தார் கம்பர்.

ஒரு இலைக்குள்ளே கடவுள் தத்துவம் இருக்கிறது. கற்பிளவுக்குள் தண்ணீர் விடாமலே செடி ஓங்கிவளருகிறதே. இந்தத் தத்துவத்தை யறிந்தால் என்னையே யறிந்துகொள்வேன். பிறகு கடவுளை அறிவேன் என்றார் டெனிசன். இந்த உண்மையை நம்மவர்கள் கையாள்கிறார்கள். சுப காரியத்திற்கு அருகம்புல்லைஉபயோகிக்கிறார்கள். சில ஆண்டுகட்குமுன் ஒரு மேனாட்டு ஆசிரியர் "ஒவ்வொரு பொருள்களிலிருந்தும் கடவுளைக் காண்கிறோம். அது சாஸரம்" என்றார்.

நாம் அரசமரத்தை வழிபடுவது போல நார்வே ஸ்வீடன் மக்கள் எல்லாப் பொருள்களையும் வழிபட்டார்கள். எல்லாவற்றிலும் சிறந்தவன் மனிதன். ஆகவே மனிதனிடமுள்ள—இருக்கவேண்டிய சிறந்த குணங்களை யெல்லாம் சேர்த்து இராமனை உருவாக்கினர். அதன் மூலம் கடவுளைக் காண்பித்தார். எங்கும் நிறைந்த வஸ்து இராமன். அதனால்தான் இராமனை வழிபடுகிறோம்.

பலா மரத்தில் சிருஷ்டி தத்துவம் எவ்வாறு அடங்கியிருக்கிற தென்பதைப் பாருங்கள். காய் பழமாகி தேன் சுளையைக் கொள்கிறது. ஆப்கானிஸ்தானத்திலிருந்து திராக்ஷைப் பழங்கள் கெட்டுப்போகா வண்ணம் வைக்கோல் சுற்றி அனுப்பப்படுகின்றனவே, அதேபோன்று பலாப்பழம் நைந்துபோகாமல் வைக்கோல் சுற்றப்பட்டிருக்கிறது. இவைகள் ஒரு அடையாளம். நம்மால் பார்க்கப்படும் எல்லா வஸ்துக்களுமே அடையாளங்கள். மனிதன் ஒரு அடையாளம். சிருஷ்டி தத்துவம், கடவுள் ஒருவனே என்பதை இச்சின்னங்கள் நிரூபிக்கின்றன. உலகம் ஒரு தத்துவத்திற்குள் அடங்கியது.

பல்லாயிரம் வருடங்களாக வளம் பெற்ற தேசம் இந்தியா. டச்சுக்காரர்கள் வியாபாரம் செய்யவந்தனர். கொள்ளை கொண்டனர். பிறகு பிரிட்டிஷார் வந்தனர். பிறரை ஒதுக்கிவிட்டுத் தாங்களே நிலைநின்றனர். இங்கிருந்து 100 வருடமாகக் கப்பலிலே போய்க்கொண்டிருக்கிறதுதங்கம். ஒரு மேல் நாட்டு ஆசிரியர் "எவ்வளவு தங்கம் போனாலும் இன்னும் எவ்வளவோ தங்கம் இருக்கிறது" என்று சொன்னார். இது வாஸ்தவந்தான். நம்முடைய கோயில்களில் எவ்வளவு தங்கம்! பெண்மணிகளிடம் எவ்வளவு தங்கம்! ஒரு ஆள் சுமை இருக்கும். மேல்நாட்டிலுள்ள சர்ச்சுகளில் ஒரு துளி தங்கமாவது இருக்கிறதா? மேல் நாட்டில் ஒரு சீமாட்டிகூட தங்கத்தை அணிவதில்லையே. இப்பொழுது நம் நாட்டில் சிறிய சங்கிலியாவது போட்டிருக்கிறார்களோ இல்லையோ என்று சந்தேகிக்கும் வண்ணம் நுட்பமாக அமைந்திருக்கிறது. வெள்ளைக்காரன் இந்தியாவைத் தேய்த்து விட்டான்.

நாம் அடிமைச் சீட்டெழுதி காப்பி டம்ளரில் வைக்கப்பட்டிருக்கிறோம். காப்பி சாப்பிடா விட்டால் சூரியன் உதயமானதுகூடத் தெரிவதில்லை. முன்னெல்லாம் பழயதும் மோரும் தான். இதைச் சாப்பிட்டு விட்டுத் தான் கம்பன் கவிபாடி யிருக்கிறான். நம்மால் எழுதமுடியுமா?

வெள்ளைக்காரன் ஒழுக்கத்தைப் பற்றிப் பேச ஆரம்பித்தானானால் அவனுக்கு ஏதோ கஷ்டங்கள் நேர்ந்திருக்கின்றன வென்பதைத் தெரிந்து கொள்ளவேண்டும் என்று ஒரு ஆங்கிலேயரே சொல்லியிருக்கிறார். இங்கிலாந்தின் முன்னேற்றம் ஹிட்லருக்கும் முசோலினிக்கும் பிடிக்கவில்லை. இதனால் பிரிட்டிஷ்காரன் ஒழுக்கம் பேச வேண்டியது தானே?

இலக்கியத்திற்கு நூதன உளர்ச்சியை உண்டுபண்ணவேண்டும். மொழி பெயர்த் தெழுதுவதால் மட்டும் பயனில்லை. 'இமிடேஷன் உனது வாழ்க்கையை அதம் செய்கிறது' என்று கவி தாகூர் சொன்னார். நமது இலக்கியங்களை நாயாக வளர்த்து நவ ரசங்களை ஊட்டவேண்டும்.

மேல் நாட்டு வானசாஸ்திரி உலகம் எப்படி இயங்குகிற தென்பதை ஆராய்ந்து பார்த்துச் சொல்கிறார். பேரண்டத்திலுள்ள பொருள்கள் தூரதிருஷ்டி கண்ணாடியால் பார்க்கப்படுகின்றன. அணு—அதைவிட நுட்பமான அணு—அதனூடே ஓடும் சிறு தூள்கள். சூரியன்—நக்ஷத்திரம்—அதற்கு மேல் நக்ஷத்திரம் ஒவ்வொன்றும் ஒவ்வொரு அண்டகோளங்கள். சூரியனுடைய ஒளியானது நம்மை வந்தடைய 8 நிமிடங்கள் ஆகின்றன. சூரியன் இப்பொழுதிருப்பதைவிட நாலு மடங்கு தூரம் இன்னும் மேலே சென்றால் நமது கண்களுக்குக் கூடப் புலப்படாது. இவைகளெல்லாம் ஒரே தத்துவத்தைக் குறிக்கின்றன. எல்லாம் பரம் பொருளால் ஆக்கப்பட்டவை. இந்த உண்மை இந்தியர்களுக்கு முன்னரே தெரிந்திருந்தது.

வான சாஸ்திர உண்மை 1000 வருடங்களுக்கு முன்னரே இந்தியர்களுக்குத் தெரிந்தது என்று ஒரு ஆங்கிலேயர் சொன்னார்.

பரஞ்சோதி திருவிளையாடல் புராணத்தில் சொல்கிறார்

அண்டங்களெல்லாம் அணுவாக
அணுக்களெல்லாம் அண்டங்களாகப்
பெரிதாய்ச் சிறிதாயினனே.

இந்த நுட்பத்தை மாணிக்கவாசகர்

வேதங்கள் ஐயா என ஓங்கி ஆழ்ந்து
அகன்ற நுண்ணியனே

என்றார்.

(13-ம் பக்கம் பார்க்க)

Best copy available

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

## 25உ வியாழன்

### சென்னை

மாலை

5—5·30 & 6—6·30 } காரைக்குடி சகோதரிகள்—வாய்ப்பாட்டு.

5·30 ஸ்ரீ பி. ஆர். ஸ்ரீபதி—வாய்ப்பாட்டு.

6·45 ஸ்ரீமதி தாராபாய்—வாய்ப்பாட்டு.

7·30 செம்பை வைத்தியனாத பாகவதர்—வாய்ப்பாட்டு.

* 6·00 ஸ்ரீமதி கமலா சத்தியா கீதம்.

* 6·35 ஸ்ரீமதி கமலாவும் ஸ்ரீ எ. சேஷகிரி ராவும் இசைப்பாட்டு.

* 9·35 ஸ்ரீ எ. சாமண்ணா—வீணை.

### திருச்சி

மாலை

6·00 "நாற்றுப் பிடுங்கி நடுதல்"—தமிழ்ப் பேச்சு.

6·30—7·00 & 8·15—8·45 } கும்பகோணம் ஸ்ரீ என். எஸ். ராஜண்ணா பிள்ளை நாகசுரம்.

7·00 "சங்கத் தமிழ்"—ஸ்ரீ டி. ஐயம் பெருமான் கோனார்—தமிழ்ப் பேச்சு.

7·15—8·00 & 8·45—9·15 } உமையாள்புரம் ஸ்ரீ ஜி. கல்யாணராமய்யர்—வாய்ப்பாட்டு.

★

## 26உ வெள்ளி

### சென்னை

மாலை

5·00 ஸ்ரீ டி. கே. சீனிவாசய்யங்கார்—வாய்ப்பாட்டு.

5·45 அ. இ. ரே. வாத்தியக்கோஷ்டி.

6·00 சுரேந்திர ஜி ஷாலிக்ராம் — வாய்ப்பாட்டு.

7·15 "வரவு செலவு கணக்கும் கையிருப்பும்"—ஸ்ரீ எ. முத்தையா—தமிழ்ப் பேச்சு.

7·30 ஸ்ரீ எம். ராமஸ்வாமிப் பிள்ளை—நாகஸ்வரம்.

8·30—8·55 & 9·35—10·30 } வடக்கஞ்சேரி ஸ்ரீ வி. எஸ். எஸ். மணி பாகவதர் வாய்ப்பாட்டு.

### திருச்சி

மாலை

6·00 'களை எடுத்தல்'—தமிழ்ப் பேச்சு.

6·30—7 & 8·15—8·45 } வேலூர் ஸ்ரீ டி. எ. சம்பந்தமூர்த்தி ஆச்சாரியார்—வாய்ப்பாட்டு.

7·00 "விளையாட்டு முறைமை"—ஸ்ரீ பி. ரத்னவேலுத் தேவர் — தமிழ்ப் பேச்சு.

7·45—8·00 & 8·45—9·15 } ஸ்ரீ வி. கிருஷ்ணமூர்த்தி ஐயர்—பிடில்.

★

## 27உ சனி

### சென்னை

மாலை

5·00 ஸ்ரீ டி. என். சேஷாத்திரி ஐயங்கார்—வாய்ப்பாட்டு.

6·00 ஸ்ரீமதி வி. என். ராஜலக்ஷ்மி—வாய்ப்பாட்டு.

* 6·45 கனக்காடு ஸ்ரீ கே. சிவராமகிருஷ்ணய்யர்—வாய்ப்பாட்டு.

6·45—7·00 & 7·30—8·00 } ஸ்ரீ கே. ஜி. ராமுடு பாகவதர் — வாய்ப்பாட்டு.

7·00 'ஆசிரியர் கௌரவம்'—தமிழ் நாடகம்.

8·05—8·55 & * 9·35—*10 } ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார்—வாய்ப்பாட்டு.

* 10·00 ஸ்ரீ ஆர். கே. வெங்கட்ராம சாஸ்திரி—பிடில்.

### திருச்சி

மாலை

6·00 "தண்ணீர் இறைப்பதற்குச் சில புதிய முறைகள்"—தமிழ்ப் பேச்சு.

6·30—7·00 & 8·15—8·45 } சீயாழி ஸ்ரீ என். கே. சதாசிவம் பிள்ளை — வாய்ப்பாட்டு.

7·00 'அவ்வையார் சந்ததியார்'—ஸ்ரீமதி ருக்மணி லட்சுமிபதி — தமிழ்ப் பேச்சு.

7·15—8·00 & 8·45—9·15 } ஸ்ரீமதி செல்லம்மாள் வீணையும்—வாய்ப்பாட்டும்.

8·00 கிராமபோன் ரிக்கார்டுகள்—ஸ்ரீ டி. என். ராஜரத்னம் பிள்ளை நாகஸ்வரம்—தோடி.

# சென்னை-திருச்சி ரேடியோ

(மே 25உ முதல் 31உ வரை)

[மீடியம் வேவ்லெங்த் 211 மீட்டர்கள் * இக் குறியிட்டவை 60·98 மீட்டர்கள்]
(திருச்சி 395·8 மீட்டர்கள்)

★

## 28உ ஞாயிறு

### சென்னை

மாலை

5·00—5·45 & 6·30—7·15 } ஸ்ரீ கே. வி. கேசவ பாகவதர் — வாய்ப்பாட்டு.

6·00 ஸ்ரீ கே. வெங்கட்ராவ் வாய்ப்பாட்டு.

7·30—8·20 & 8·30—8·55 } டைகர் ஸ்ரீ கே. வரதாச்சாரியார்—வாய்ப்பாட்டு.

9·35 ஸ்ரீமதி எ. ரங்கநாயகம்மா—வாய்ப்பாட்டு.

### திருச்சி

மாலை

6·00 கால் நடைகள்—தமிழ்ப் பேச்சு.

6·30—7·00 & 8·15—8·45 } ஸ்ரீ டி. சங்கரன்—வாய்ப்பாட்டு.

7·15—8·00 & 8·45—9·15 } ஸ்ரீமதி ருக்மணி லக்ஷ்மிபதி-வீணை.

★

## 29உ திங்கள்

### சென்னை

மாலை

5·05 ஸ்ரீ டி. வி. கிருஷ்ணன்—வாய்ப்பாட்டு.

6·30 ஸ்ரீ வி. எஸ். ரங்கப்பா—வீணை.

6·45 "தேவலோகத்தில் ராகங்கள்"—சங்கீத நிகழ்ச்சி.

7·15 "தனித் தமிழ்"—ஸ்ரீ டி. சற்குணம்—தமிழ்ப் பேச்சு.

7·30—8·15 & 8·25—8·55 } ஸ்ரீ பாபா கே. எஸ். வெங்கட்ராமய்யர்—பிடில்.

* 9·35 ஸ்ரீமதி எம். லோகம்பாள்—வாய்ப்பாட்டு.

### திருச்சி

மாலை

6·00 'கால் நடைகளுக்கு உணவு'—தமிழ்ப் பேச்சு.

6·30—7·00 & 8·15—8·45 } பந்தநல்லூர் ஸ்ரீமதி பி. எஸ். ராஜாயி—வாய்ப்பாட்டு.

7·00 "ஓய்வு நேரம்"—கான்பகதூர் பி. கலிபுல்லா சாகிப் பகதூர்—தமிழ்ப் பேச்சு.

7·15—8·00 & 8·45—9·15 } ஸ்ரீ டி. கே. பால கணேசய்யர்—புல்லாங்குழல்.

★

## 30உ செவ்வாய்

### சென்னை

மாலை

5·00 ஸ்ரீ எ. எஸ். ராமகிருஷ்ணய்யர்—வாய்ப்பாட்டு.

* 6·00 * 6·25 * 6·40 } ஸ்ரீ டி. ராமகிருஷ்ண சாஸ்திரி—பாட்டு.

5·45 அ. இ. ரே. வாத்தியக் கோஷ்டி.

6·00 ஸ்ரீமதி லலிதா விஸ்வநாதன்—வாய்ப்பாட்டு.

* 5·00 மன்னார்குடி ஸ்ரீ எஸ். குஞ்சு ஐயர்—வாய்ப்பாட்டு.

6·45 ஸ்ரீ வி. ஆர். பாலவிஸ்வநாதன்—வாய்ப்பாட்டு.

7·30—8·15 & 8·30—8·55 } ஸ்ரீ டி. கே. பிச்சு ஐயங்கார் — வாய்ப்பாட்டு.

8·15 ஸ்ரீ கே. வெங்கட்ரமணராவ்—ஜலதரங்கம்.

8·55 "கேள்வி கேளேல்"—ஸர் டி. விஜயராகவாச்சாரியார் பேச்சு.

*9·35 ஸ்ரீ எம். வெங்கடசாமி ராஜு—கோட்டுவாத்தியம்.

*9·50 ஸ்ரீ பி. ஆர். எஸ். மணி—புல்லாங்குழல்.

### திருச்சி

மாலை

6.00 "கால் நடைகளைப் பராமரிப்பது"—தமிழ்ப் பேச்சு.

6·30—7·00 & 8·15—8·45 } கண்டதேவி ஸ்ரீ திருவேங்கடம் ஐயங்கார் வாய்ப்பாட்டு.

7·00 "திருச்சி"—ராவ் சாஹிப் எஸ். கே. தெய்வசிகாமணி—தமிழ்ப் பேச்சு.

7·15—8·00 & 8·45—9·15 } தஞ்சை ஸ்ரீ பி. துரையப்ப பாகவதர்—கோட்டுவாத்தியம்.

8·00 ஸ்ரீமதி சரோஜினி நாயுடு—ரிகார்டுகள்.

★

## 31உ புதன்

### சென்னை

மாலை

5·00 ஹரிகதா காலக்ஷேபம்—ஸ்ரீ எஸ். எஸ். மணி பாகவதர்.

6·00 ஸ்ரீ கே. எஸ். நாராயண பாகவதர்—வாய்ப்பாட்டு.

6.45 ஸ்ரீ எஸ். ராமசாமி ஐயர்—வீணை.

7·45 "நாகரீகம்"—ஸ்ரீ கே. ராமச்சந்திரன் தமிழ்ப்பேச்சு.

7·30—8·10 & 8·15—8·55 } பாருப்பள்ளி ஸ்ரீ ராமகிருஷ்ணய்ய பந்துலு—வாய்ப்பாட்டு.

9·35 ஸ்ரீமதி பத்மாக்ஷி—வாய்ப்பாட்டு

### திருச்சி

மாலை

9·00 "பயிர்களைப் பாதுகாத்தல்"—தமிழ் பேச்சு.

6·30—7·00 & 8·45—8·45 } ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர்—வாய்ப்பாட்டு.

7·00 "பண்டைக்கால நீதியாளர்கள்"—பண்டித மணி, ஸ்ரீ எம். கதிரேசன் செட்டியார் தமிழ்ப் பேச்சு.

7·15—8·00 & 8·15—9·15 } செம்மங்குடி ஸ்ரீ நாராயணசாமி ஐயர் பிடில்.

✳

[குறிப்பு:—தினமும் இரவு 9-15க்கு இரு ஸ்டேஷன்களிலிருந்தும் வர்த்தமானமும் வானிலை அறிக்கையும். தினமும் திருச்சியில் பகல் 2 முதல் 3 வரை கிராமபோன் சங்கீதம் சென்னையில் இரவு 10-30க்கும், திருச்சியில் 9-30க்கும் நிகழ்ச்சிகள் முடிவடையும்.]

## ரயில் வண்டிப் போக்கு வரத்து

| வண்டியின் நிர். .... | 25 | 1 | 67 | 33 | 29 | 31 | 7 |
|---|---|---|---|---|---|---|---|
| திருச்சி புறப்படும் நேரம் | 3-57 | 7-30 | 10-40 | — | 13-20 | 17-27 | 22-15 |
| புதுக்கோட்டை ஷை | 5- 6 | 8-41 | 12- 9 | — | 14-42 | 19- 0 | 23-42 |
| நமுனசமுத்திரம் ஷை | 5-17 | 8-52 | 12-19 | — | 15-0 | 19-11 | — |
| திருமயம் | 5-31 | 9-8 | 12-32 | — | 15-13 | 19-25 | 0- 5 |
| காரைக்குடி ஷை | 6-15 | 10- 1 | 13-12 | 14-27 | 16-39 | 20-35 | 0-57 |
| தேவகோட்டை ரோடு | 6-25 | 10- 9 | — | 14-35 | 16-47 | 20-43 | — |
| கல்லல் ஷை | 6-42 | 10-26 | — | 14-52 | 17-4 | 21-0 | 1-23 |
| காட்டரசன்கோட்டை | 7-13 | 10-48 | — | 15-21 | 17-33 | 21-25 | 1-52 |
| சிவகெங்கை ஷை | 7-25 | 10-59 | — | 15-42 | 17-52 | 21-36 | 2-4 |
| மானாமதுரை சேரும் நேரம் | 8- 2 | 11-30 | — | 16-14 | 18 24 | 22- 5 | 2-33 |
| வண்டியின் நிர். .... | 286 | 284 | 546 | 290 | 284 | 288 | |
| மானாமதுரை புறப்படும் நேரம் | 8-20 | 11-52 | 15-10 | 16-35 | 18-40 | 23-25 | |
| மதுரை சேரும் நேரம் | 9-37 | 13-15 | 16-22 | 17-58 | 20-0 | 0-44 | |
| வண்டியின் நிர். .... | 287 | 289 | 545 | 281 | 285 | 283 | |
| மதுரை புறப்படும் நேரம் | 1-13 | 6-42 | 10-33 | 13-30 | 15-32 | 17-14 | |
| மானாமதுரை சேரும் நேரம் | 2-27 | 7-55 | 11-45 | 14-43 | 17-1 | 18-32 | |
| வண்டியின் நிர்..... | 32 | 68 | 30 | 2 | 34 | 26 | 8 |
| மானாமதுரைபுறப்படும்நேரம் | — | 8-14 | 12-15 | 15-13 | 17-18 | 18-55 | 23-17 |
| சிவகெங்கை ஷை | — | 8-49 | 12-51 | 15-41 | 17-53 | 19-29 | 23-49 |
| காட்டரசன்கோட்டை ஷை | — | 9-0 | 13- 2 | 15-52 | 18-4 | 19-40 | 0-1 |
| கல்லல் ஷை | — | 9-29 | 13-32 | 16-13 | 18-33 | 20-4 | 0-30 |
| தேவகோட்டை ரோடு ஷை | — | 9-46 | 13-49 | 16-30 | 18-50 | 20-21 | — |
| காரைக்குடி ஷை | 6-50 | 10- 3 | 14- 6 | 16-47 | 18-57 | 20-38 | 1-2 |
| திருமயம் ஷை | 7-24 | 10-35 | 14-41 | 17-20 | — | 21-13 | 1-44 |
| நமுனசமுத்திரம் ஷை | 7-38 | 10-48 | 14-58 | 17-33 | — | 21-27 | — |
| புதுக்கோட்டை ஷை | 7-53 | 11-3 | 15-13 | 17-50 | — | 21-49 | 2-10 |
| திருச்சி சேரும் நேரம் | 9-32 | 12-30 | 16-42 | 19- 0 | — | 22-58 | 3-36 |

குறிப்பு:— 33—29-நிர். இரண்டு வண்டிகளும் நேரே மதுரை ஜங்ஷனுக்குப் பாகின்றன. 26—8-நிர். இரண்டு வண்டிகளும் நேரே திருச்சி-கார்டு லயன் வழியாக சென்னை எழும்பூர் போகின்றன.

## நடப்புவட்டி விகிதங்கள்

| மாதம் | நாள் | சென்னை | ரங்கூன் | பினாங்கு | சிங்கப்பூர் | செய்லோன் |
|---|---|---|---|---|---|---|
| வெகுதானிய வைகாசி | 32 | 0-7-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆனி | 31 | 0-6-9 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆடி | 32 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஆவணி | 31 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| புரட்டாசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| ஐப்பசி | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| கார்த்திகை | 30 | 0-6-3 | 0-4-0 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| மார்கழி | 29 | 0-6-0 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |
| தை | 29 | 0-6-6 | 0-4-9 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| மாசி | 30 | 0-6-6 | 0-5-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| பங்குனி | 31 | 0-6-9 | 0-5-0 | 0-4-6 | 0-4-3 | 0-4-0 |
| பிரமாதி சித்திரை | 31 | 0-6-6 | 0-4-6 | 0-4-6 | 0-4-0 | 0-4-0 |


இனும்!! இனும்!!

போஜன விதிகள்.

என்னும் சிறிய ஆரோக்கிய மலரைக் கேட்பவர்களுக்கு இனாமாகவும் தபால் செலவில்லாமலும் அனுப்பப்படும்.

உடனே உங்களுடைய விலாஸத்தைத் தெரிவியுங்கள்.

ஆதங்க நிக்ரஹ ஔஷதாலயம் 26, பிராட்வே, மதராஸ்.

ஏஜண்டு:— T. N. சொக்கலிங்கம் பிள்ளை, வடக்கு சித்திரை வீதி, மதுரை.




# விற்பனை வரி மசோதா சட்டமாயிற்று

## ராஜாங்க சபையில் விவாதம்

### எதிர்க்கட்சியினர் வெளியேற்றம்

மே 17உ கூடிய சென்னை ராஜாங்க சபையில் பிரதம மந்திரி கனம் வி. ராஜகோபாலாச்சாரியார் அஸம்பிளியில் நிறைவேறிய விற்பனை வரி மசோதாவைப் பிரேரித்தார். மசோதா பற்றி நிகழ்ந்த விவாதத்தின் சில முக்கிய பகுதிகள் வருமாறு:—

பிரதம மந்திரி கனம் ராஜாஜி—: நான் போட்டுள்ள கணக்குப்படி இம் மசோதாவால் ஒரு கோடி ரூபாய்தான் வருமானம் கிடைக்கும். கிராமத்திலிருக்கும் சிறிய கடைக்காரர்கள் இம்மசோதாவால் பாதிக்கப்பட மாட்டார்கள். இந்த வரியால் அதிகப்பணமுள்ளவர்கள் அதிகமாகவும், சில்லரைச் சாமான்களை வாங்கும் ஏழைகள் கொஞ்சமாகவும் பாதிக்கப்படுவார்கள். இது மிகவும் நியாயமான வரியென்று நான் அபிப்பிராயப்படுகிறேன். ஒரு பழக்கத்துக்கு அடிமையாக இருக்கும் ஏழைகளிடமிருந்தும், உணவை உற்பத்தி செய்பவனிடமிருந்தும் வரி வசூலிக்கும் முறையை மாற்றியமைப்பது இந்த கவர்ன்மெண்டின் நோக்கம். கள் மீது மாத்திரம் விதிக்கப்படும் விற்பனை வரியை எல்லா சரக்குகள் மீதும் விதிப்பது எங்கள் உத்தேசம்.

மசோதாவை ஆலோசனைக் கெடுத்துக் கொள்வதை ஒத்தி வைக்க வேண்டுமென்று எதிர்க்கட்சியினர் கொண்டுவந்த பிரேரணைகள் எல்லாம் தோற்றுப் போயின.

இந்த மசோதாவால் வேறு மாகாணங்களுக்கு-உதாரணமாகப் பிரிட்டிஷ் கொச்சிக்கு வியாபாரம்பிரிந்துபோய்விடுமென்று மிஸ்டர் ஸல்டானா கூறினர். சாதாரணமாக விற்பனைவரி விதிக்கும் கொள்கையைத் தாம் ஆதரிப்பதாயும் ஆனல், இம் மசோதாவில் காணப்படும் பல அம்சங்களைத் தாம் பலமாக ஆட்சேபிப்பதாயும், குறிப்பிட்டுள்ள வரி விகிதம் அதிகமென்றும், ஸர் பிராங் பார்லி குறிப்பிட்டார். இத்துடன் சபை கலைந்தது.

பிற்பகல் சபை மீண்டும் கூடியபோது, விற்பனை வரியால் ஏற்றுமதி வியாபாரம் பெரிதும் பாதிக்கப்படுமென்றும், புழுங்கலரிசி வியாபாரத்தில் வங்காளத்துக்கும் சென்னைக்கும் பலமான போட்டியிருக்கிறதென்றும், வெங்காயம் முதலிய சாமான்களின் வியாபாரத்திலும் இதர மாகாணங்களுக்கும் சென்னைக்கும் தீவிரமான போட்டியிருக்கிறதென்றும், இந்த நிலையில், விற்பனை வரியால் இந்த வியாபாரங்கள் எவ்வளவு பாதிக்கப்படுமென்பதை ஊகித்துக் கொள்ளலாமென்றும் ஸ்ரீ பி. நாராயணஸ்வாமி நாயுடு கூறினர்.

கட்டாயக் கல்வி, மதுவிலக்கு, நிலவரிக் குறைப்பு ஆகிய திட்டங்களை அமுலுக்குக் கொண்டுவர இவ்வரிகளை விதிப்பதைத் தவிர வேறு வழியில்லை யென்று ஸ்ரீ டி. எ. ராமலிங்கம் செட்டியார் கூறினர்.

விவசாயிகளின் உணவுப் பொருள்களுக்குக் கூட இவ்வரியில் விலக்களிக்காதிருப்பது விவசாயிகளை அதிகம் பாதிக்குமென்றும் லாபமில்லாதவற்றிலும் வரி கொடுக்க வேண்டுமென்று மசோதாவிலிருப்பது அநியாயமானதென்று ஸ்ரீ எம். ராமகிருஷ்ண ரெட்டி கூறினர்.

"விற்பனை வரியால் இந்த மாகாண வியாபாரம் இங்கு விட்டுப் போய்விடுமென்று சொல்வது வீண் புரளி. இது வியாபாரிகள் வரிதான்; பண்டம் வாங்குவோரின் வரியல்ல. மரணவரி, விவசாய வருமானவரி ஆகிய வரிகளையும் சர்க்கார் விதிக்கவேண்டும். இந்த மசோதாவை முழு மனதுடன் ஆதரிக்கிறேன்" என்று டாக்டர் பி. ஜே. தாமஸ் கூறினர். ஸ்ரீ எம். டி. டி. குமாரசாமி முதலியார் மசோதாவைத் தீவிரமாக எதிர்த்துப் பேசினர். இந்த மசோதாவை நிறைவேற்றும் விஷயத்தில் பொது ஜன அபிப்பிராயம் முற்றும் புறக்கணிக்கப்பட்டிருக்கிறதென்றும் அவர் குறிப்பிட்டார். இத்துடன் அன்று சபை கலைந்தது.

18உ மீண்டும் சபை கூடியபோது ஸர். கே. வி. ரெட்டி விவாதத்தை ஆரம்பித்தார். காங்கிரஸ்காரர்கள் பல வருஷங்களாக உப்புவரியை எதிர்த்து வந்திருக்கின்றனரென்றும், ஆனல் இந்த வரி உப்பு வியாபாரத்தையும் பாதிக்குமென்றும், மதுவிலக்கு நஷ்டத்தை ஈடு செய்ய எந்த வரியையும் அங்கீகரிக்க வேண்டுமென்பதில்லை யென்றும் அவர் கூறினர். இந்த வரியை இந்த சர்க்கார் கொண்டு வந்திருக்கிறார்களென்ற காரணத்தால் இதைத் தாங்கள் எதிர்க்கவில்லை யென்றும், எல்லா ஜனங்களுக்கும் இது கஷ்டத்தை விளைவிக்குமென்ற காரணத்தாலேயே இம்மசோதாவை எதிர்ப்பதாயும் ஸ்ரீ என். ஆர். சாமியப்ப முதலியார் கூறினர்.

பிரதம மந்திரி விவாதங்களுக்குப் பதில் கூற, மசோதாவை ஆலோசனைக் கெடுத்துக்கொள்ள வேண்டுமென்ற பிரேரணை நிறைவேற, சபை கலைந்தது.

பிற்பகல் சபை கூடியபோது மசோதாவின் பிரிவுகளும் அவற்றிற்குக் கொடுக்கப்பட்டுள்ள திருத்தங்களும் ஆலோசனைக்கெடுத்துக் கொள்ளப்பட்டன.

விற்பனைக்கு மட்டுமின்றி, வாங்குவதற்கும் வரி யென்றிருப்பதை ரத்துசெய்ய வேண்டுமென்று ஸ்ரீராமகிருஷ்ண ரெட்டி திருத்தங்கொண்டு வந்தார். கூட்டுறவு சங்கங்களுக்கு விலக்களிக்க வேண்டுமென்று ஸ்ரீ சாமியப்ப முதலியார் ஒரு திருத்தங்கொண்டு வந்தார். பிரிட்டிஷ் கொச்சியைத் தவிர மற்ற இடங்களில் மட்டும் சட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவது எனறு ஸ்ரீ ஸல்டானா ஒரு திருத்தங்கொண்டு வந்தார். எல்லாத் திருத்தங்களும் தோற்கடிக்கப்பட்டன.

வரி விதிக்கும் விகிதத்தைக் குறிப்பிடும் பிரிவில், இருபதினாயிரம் ரூபாய்க்கு உட்பட்டு வியாபாரம் செய்கிறவர்களுக்கு மாதம் 5 ரூபாயும், இருபதினாயிரம் ரூபாய்க்கு மேற்பட்டு வியாபாரம் செய்பவர்களுக்கு ½ சத விகிதமும் வரி யென்று அப்பிரிவில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இவ்விகிதங்களை முறையே 2½ ரூபாயாகவும் ¼ சத விகிதமாகவும் திருத்த வேண்டுமென்று ஸர் பிராங்க் பார்லியும், பிந்தியதை ⅛ சத விகிதமாகக் குறைக்க வேண்டுமென்று ஸ்ரீ சாமியப்ப முதலியாரும் திருத்தங்கொண்டு வந்தனர். இருவரது திருத்தங்களும் பெரும்பாலான வாக்குகளால் தோற்கடிக்கப்பட்டன.

5-வது பிரிவு, வரியிலிருந்து விலக்களிக்கப்படும் பொருள்களைப்பற்றியது. அரிசி, நொய், நெல், கேழ்வரகு, கம்பு, சோளம் முதலிய உணவுப் பொருள்களையும் உப்பையும் வரி விதிப்பிலிருந்து விலக்கிவிட வேண்டுமென்று ஜனாப் எஸ். கே. அகமத்மீரான் சாகிபு கொண்டுவந்த திருத்தமும் தோல்வியுற்றது. இத்துடன் சபை கலைந்தது.

19உ காலை மீண்டும் சபை கூடிய போது, மசோதாவின் பிரிவுகள் ஆலோசனைக்கெடுத்துக்கொள்ளப்பட்டன.

6-வது பிரிவில் தோல் வியாபாரத்துக்கு ஒரு தடவையே வரி விதிக்கவேண்டுமென்று கூறப்பட்டிருக்கிறது. இத்துடன் வெல்லம், சர்க்கரை, வெங்காயம், மஞ்சள், மணிலாக்கொட்டை ஆகியவற்றையும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஸர். கே. வி. ரெட்டி ஒரு திருத்தத்தைப் பிரேரித்தார். மர வியாபாரத்தையும் அவ்வாறே சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கான்பகதூர் மொய்து சாகிப் ஒரு திருத்தம் கொண்டுவந்தார். இரு திருத்தங்களும் தோல்வியுற்றன.

எதிர்க்கட்சியினர் வெளியேற்றம்

பிரிவுகள் பற்றியும் திருத்தங்கள் பற்றியும், பிரதம மந்திரி கொண்டுள்ள மனப்பான்மையை யொட்டி மேற்கொண்டு விவாதத்தில் தாங்கள் கலந்து கொள்வதில் பயனில்லை யென்ற முடிவிற்கு வந்துவிட்டதாக ஸ்ரீமான் சாமியப்ப முதலியார் கூறினர். சட்டசபை நடவடிக்கைகளில் சாதாரணமாகக் காட்டப்படும் மரியாதை கூடத் தங்களுக்குப் பிரதம மந்திரி காட்டவில்லை யென்று ஸர் கே. வி. ரெட்டி கூறினர். பின்னர் எதிர்க்கட்சியினர் சபையிலிருந்து வெளியேறினர். ஸர் முகமது ஊஸ்மானும் ஐரோப்பியக் கட்சியினரும் சபையிலேயே இருந்து நடவடிக்கைகளில் கலந்து கொண்டனர்.

14வது பிரிவு ஆலோசனைக்கு வந்தது. அதிகாரம் பெற்ற எந்த சர்க்கார் உத்யோகஸ்தரும் எந்த வியாபாரியையும் கணக்குக் காட்டும்படி கேட்கலாமென்று மசோதா கூறுகிறது. டிவிஷனல் ஆபீஸர் உத்யோகத்துக்குக் குறையாத அதிகாரமுடைய ஒரு உத்யோகஸ்தரையே மேற்படி காரியத்துக்கு நியமிக்க வேண்டுமென்று ஸர் பிராங்க் பார்லி ஒரு திருத்தம் கொண்டுவந்தார். பொறுப்புள்ள உத்யோகஸ்தர்களே நியமிக்கப்படுவார்களெனப் பிரதம மந்திரி உறுதி கூறியதன் மேல், திருத்தம் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்பட்டது.

பிறகு, மசோதாவின் மற்றப் பிரிவுகளெல்லாம் விவாதமின்றி நிறைவேறின. மசோதாவைச் சட்டமாக நிறைவேற்ற வேண்டுமென பிரதம மந்திரி பிரேரிகத போது "இந்த வரியால் வியாபாரமே புனருத்தாரண மடையும். ஹேஷ்ய வியாபாரம் குறையும். விலைகள், ஏழ்மை தேசத்துக்குத் தக்கவையில்லை. இந்த வரியால் வியாபாரம் கெட்டுப்போய் விடாது. பண்டம் வாங்குவோரை இந்த வரி வெகுவாகப் பாதிக்காது. இந்த வரியால் மதுவிலக்குப் பூரணமாக வருமென்பது நிச்சயம்" என்று கூறினர். ஸர் முஹம்மது ஊஸ்மான் வரியை ஆதரித்துப் பேசினர். பிறகு பிரதம மந்திரியின் பிரேரணை நிறைவேறி மசோதா சட்டமாயிற்று.


'அமிர்தாஞ்சன்' டிரேட் மார்க்கையும், பெயரையும் காப்பியடித்ததற்காக

நாகபுரி, அமிர்தாஞ்சன் டிப்போவின் புரொப்ரைட்டர் லயன்-ஹேட் அமிர்தாஞ்சனைத் தயாரித்து விற்பனை செய்ததற்காக, சென்னை அமிர்தாஞ்சன் லிமிடெட்டின் நாகபுரி கிளை மானேஜரால் பிராசிகூஷன் செய்யப்பட்டு இ. பி. கோ. 482 & 486 செக்ஷன்களின் கீழ், 18-4-39உ நாகபுரி 1வது கிளாஸ் மாஜிஸ்டிரேட்டினல் ரூ. 500 அபராதமும் செலுத்தத் தவறினல் 1 வருஷ கடின காவலும் விதிக்கப்பட்டார். மேலும், அமிர்தாஞ்சன் என்ற பெயர் கொண்ட எல்லா தயாரிப்புகளையும், அவற்றின் சாதன கருவிகளையும் சர்க்கார் பறிமுதல் செய்துவிட்டனர்.



இலங்கை 'குமரன்' வாசகர்கட்கு அறிவிப்பு.

இது நல்ல சமயம்!

பழனி, வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளை

தீராத ரோகங்களை எல்லாம் தீர்த்து உலகமெங்கும் நல்ல புகழும் கீர்த்தியும் பெற்றவர் என்பது உலகப் பிரசித்தம். அவரை இலங்கைக்கு வந்து தங்கள் தங்கள் ரோகங்களை தீர்க்கவேண்டுமென அநேக கனவான்கள் வேண்டியதற்கேற்ப தமது குமாரரும், சென்னை தமது பிராஞ்சு வைத்தியசாலை டாக்டருமான சிவசுப்பிரமணிய பிள்ளையை அனுப்பி யிருக்கிறார். அவர் மே-மீ 15உ முதல் ஆடிவேல்வரை இலங்கையின் பிரதான பட்டணங்களான கொழும்பு, யாழ்ப்பாணம், கண்டி, காலி, நுவரேலியா முதலிய பகுதிகளில் முகாம் செய்து ரோகிகளை நாடிப்பரீக்ஷை செய்து தக்க மருந்துகளைக் கொடுத்து வியாதிகளை சொஸ்தம் செய்வார். இந்த நல்ல சமயத்தை இலங்கை வாழ் 'குமரன்' வாசகர்கள் பயன்படுத்தி குணம் பெறுவார்களாக.



மூல வியாதியைப் பூரூவும் குணப்படுத்துகிறது.

ஹாடென்ஸா

எப்பேர்ப்பட்ட மூலமாயினும்சரி இரத்தம்வடிதலை நிறுத்திக் குணப்படுத்துகிறது.

உலகப்பிரசித்தமான டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் உபயோகப்பட்டு சிபார்சு செய்யப்பட்டது. மூலம் முதலிய வியாதிகட்குச் சிறந்தும், வெகுசீக்கிரத்தில் குணப்படுத்துவதுமான மருந்து இது ஒன்றுதான். ஆபரேஷன் தேவை இல்லை.

The ideal remedy „Hadensa" Berlin — Friedenau

உங்களூர் மருந்து வியாபாரிகளிடமிருந்து வாங்குங்கள்.



கண்மூடித் திறக்குமுன் மாயமாய் மறைந்தோடும் எண்ணிறந்த தந்திரக் காக்ஷிகள்!

நாடகக் கலையின் வெற்றி!

ஸ்ரீ கிருஷ்ண லீலா

நேரில் கண்டு களியுங்கள்!

M. S. B. S. சபையார்.


Bleed through.

# சென்னை நகர விடுதி

## பர்மாவாழ் நகரத்தார்கள் கவனிப்பார்களா?

(உமாபதி)

பல வருடங்களுக்கு முன்னர், பர்மாவில் தொழில் நடத்திவரும் நம் தனவணிக சமூகத்தினரின் போக்குவரத்து வசதிகளைக் குறித்து வழியிலுள்ள சென்னையில் நமது சமூகப் பிரபலஸ்தர்களின் பெரு முயற்சியால் நகர விடுதி ஒன்று திறவப்பெற்றது. திறவும்பொழுது நம் சகோதரர்கட்கும் அவர் தம் பணியாட்களுக்கும் தங்க வசதி செய்து கொடுப்பதற்கும் மற்றும் பிற வேண்டுவன செய்வதையுமே முக்கிய நோக்கமாக்கொண்டு சென்னையில் நகர விடுதி ஒன்று ஸ்தாபிக்கப்பட்டது. சில வருடங்களுக்கு முன்னர் அந்நோக்கம் தக்க பயனளித்ததாகவும் தெரிகிறது. ஆனால் இப்பொழுது நிர்வாகம் செவ்வனே நடத்தப்பெறவில்லை. நமது முன்னோர்களின் நோக்கத்தைப் பாழ்படுத்தலாமா? இப்பொழுது மேற்படி நகர விடுதி ஒரு காரியஸ்தரின் நிர்வாகத்திலிருக்கிறது. இது கால அவர் நிர்வாகத்தை ஒழுங்காக நடத்தவில்லையென்பது வெள்ளிடை மலைபோல் புலப்படுகிறது. மேலும் அவர் இன்று நமது சோதரர்களுக்குச் சரியான வசதிகள் செய்வதாய்த் தெரியவில்லை. பலர் இது குறித்து என்னிடத்தில், கண் விழித்து வந்தவுடன் நியாய சபையின் ஊழியர்களின் முகத்தையே தரிசிக்க வேண்டியதிருக்கிறதென்று புகார் கூறியிருக்கின்றனர். நாம் ஓர் காரியஸ்தரை ஏன் அதிகாரத்தில் வைத்திருக்கிறோமென்றால், பட்டணத்தில் அநுபவம் பெறாத நம்மவர்களின் அல்லது ஆங்கிலத்தில் கடிதம் தந்தி முதலியவை எழுத அநுபவம் பெறாத நம்மவர்களின் விருப்பங்களை நிறைவேற்றிக்கொள்ளுவதற்காகவே. அப்படி இருக்க மேற்படி காரியஸ்தர் கப்பல் புறப்படும் தினமும் கப்பல் வரும் தினமும் மாத்திரம் நகர விடுதிக்கு வந்து போவது நியாயமா? அவருக்குப் போதிய சம்பளம் கொடுக்காததால் அப்படிச் செய்கிறாரோ என்னவோ! அறியக் கூடவில்லை. இங்கு இன்னொரு விஷயம் குறிப்பிடவேண்டியது அவசியமாகிறது. சமையற் பகுதி அழகப்பக் கோனாரின் மேற்பார்வையில் நடக்கிறது. அவர் தனது வருவாயைக் குறித்தோ என்னவோ சில நேரங்களில் செட்டியார்களின் தொடர்பைப் பெறாத சில பிற சமூக இரங்கூன் பிரயாணிகளைக்கொண்டு வந்து விடுதியில் நிரப்பி விடுகிறார். ஸ்நானம் செய்யுமோரிடத்தில், "நகரத்தார்கள் மாத்திரம் ஸ்நானம் செய்யலாம்' என்று பெரிய எழுத்துக்களால் பொறிக்கப்பெற்றிருக்கிறது. ஆனால் அவ்விடத்தில் பல ரகத்தினர் தோன்றுவது கண் கூடு.

மற்றொரு முக்கிய விஷயம் நான் இந்தக் கட்டுரையை வெளிப்படுத்துவதற்கு அடி கோலியாக இருந்தது. அது என்னவென்றால் மண்ணடி என்ற சொல் ஒப்பட்ட ஓர் குறிப்பிட்ட எல்லையில் வசிக்கும் மக்களில் பெரும்பான்மையோர் நமது நகர விடுதியை மலம் கழிக்கும் பொதுஜன இடமாகவும் உண்டு களித்து உறங்கும் ஸ்தாபனமாகவும் எண்ணி மலம் கழிப்பதற்கும் நித்திரை போவதற்கும் தினே தினே விடுதிக்கு வந்து விடுகின்றனர். இவ்வாறு நாம் மண்ணடி வாசிகளை அநுமதித்திருப்பதிலிருந்து நம் நிர்வாக ஊழல் வெளிப்படுகிறதல்லவா? மண்ணடி வாசிகள் நமது மக்களுக்கு இழைக்கும் இன்னல்கள் பல. அதை நேரில் கண்ணுற்றவர்கள் ஒரு காலத்தும் மறக்க முடியாது. விடுதியை ஏற்படுத்தும் காலத்து "இரங்கூன் நகர விடுதி" என்று குறிப்பிடாது "பொதுஜன விடுதி" என்று குறிப்பிட்டிருந்தால் நலமாக இருந்திருக்கும். நகர விடுதியிலுள்ள ஒவ்வொரு நிர்வாகியும் விடுதி அவர்களது சொந்த இல்லமென நினைத்து உரிமை கொண்டாடுகிறார்கள். ஐயோ! என்னே கொடுமை!! ஏற்படுத்திய நமக்கு உரிமையில்லாது போவது நீதியா? இன்னும் நகர விடுதியில் சீர்திருத்தவேண்டிய விஷயங்கள் அனந்தமிருக்கின்றன. சுத்தமாக வெள்ளையாக வெளுத்துத்தரக்கூடிய ஒரு வண்ணானை ஏன் நியமிக்கக்கூடாது? இப்பொழுது கால் பிடிக்கும், எண்ணை தேய்க்கும் வேலையாட்கள் தவைப்பதற்கு அதிக ஊதியம் பெறுகின்றனர். இத்தகைய சிறு குறைகளையெல்லாம் ஏன் நீக்கக்கூடாது? நமது சமூகத்தினரைக் குறைகூற வேண்டுமென்பது எனது விருப்பமல்ல. நாம் ஏன் இந்நவீன உலகத்தில் முன்னேற்றமடையக் கூடாது? ஏன் நமது காரியங்களைத் தக்கவாறு சீர்திருத்திக்கொள்ளக்கூடாது என்பதே இச் சிறியேனின் கேள்வி. இன்னும் நகர விடுதி நிர்வாகத்தில் அநேக குறைகளிருக்கின்றன. அவைகளை நம் சமூக சோதரர்கள் குறைகாணும்போதெல்லாம் அப்போதைக் கப்போது பயமின்றிப் பிரபல பத்திரிகைகளில் வெளியிடுவார்களென எதிர்பார்க்கிறேன். நகர விடுதியில் வந்திறங்கும் நபர்களில் சிலர் மகமை கொடுக்காது போய்விடுவதாகவும் கேள்வி. அதைத் தடுப்பதன் நிமித்தம் ஓர் விஸிட்டர்ஸ் புத்தகமொன்று ஏன் வைக்கக்கூடாது? ஒவ்வொரு பிரயாணியும் வந்தவுடன் அப்புத்தகத்தில் பெயரைப் பதிந்துவிட்டால், பணத்தைக் கொடுக்காது சென்றுவிட்டாலும் பின்னொரு காலத்தில் வசூலிக்க ஹேதுவாக இருக்கும். இச்சிறு பிழைகளை எல்லாம் எளிதில் தீர்த்துவிடலாம். இச்சிறு விஷயங்களை எல்லாம் ஏன் விரைவில் நிவர்த்திக்கக்கூடாது?

நிற்க இது காறும் உலகத்தில் பல பாகங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் அபரிமிதமாக இருந்தது. ஆனால் நமது சமூகத்திற்கு ஒரு காலத்தும் மேற்படி திண்டாட்டம் வாராதென்று நினைத்திருந்தேன். இன்றோ நமது சோதரர்களிலநேகர் கற்றறிந்து வேலையில்லாது உழலுகின்றனர். அவர்களிலொருவரை நியமித்து நம் சமூக நபரிலொருவரின் ஏழ்மையைத் தருணம் வாய்ந்திருக்கும்போது ஏன் உபயோகித்துக் கொள்ளக்கூடாது? பர்மாவாழ் நகரத்தார்கள் ரங்கூன் நகர விடுதியிலுள்ள குறைகளை விரைவில் நீக்குவார்களென எதிர்பார்க்கிறேன்.


கோடைகாலத்தில் ஏன் வருந்தவேண்டும்?

ருக்மணிகுக்கர்

விபா புத்தகம் இனும்

ஒன்று வாங்கிக்கொண்டால் பெண்மணிகள் அடுப்பண்டை கஷ்டப் பட வேண்டியதில்லை.

போலி குக்கர்களை வாங்கி ஏமாறதீர்கள்

ருக்மணி குக்கர் கம்பெனி

ராயபுரம் (2) சென்னை

ஏஜண்டுகள்:—
நாகப்பட்டணம் N. வீரப்ப செட்டி
காரைக்குடி:—சாரதா ஸ்டோர்ஸ்[பிரதர்
புதுக்கோட்டை:—சம்பந்தம் & கோ.
முக்கிய ஊர்களில் ஏஜண்டுகள் உண்டு



ஜோதிட மகுட வர்த்தனர்
9-5-38ல் சென்னை ஜோதிஷர் மகாநாட்டின் சபைத்தலைவர்

இந்து மன்னர் சமஸ்தான 25-வது தலைமுறை ஜோதிஷர் பீமகவி, சுகர், புஜண்டர், சாஸ்திரநிபுணர். ஜோதிஷத்தில் "உலக சிரேஷ்டர்" ஜாதகம் கணிக்க ரூ2, ஒரு தெசைக்கு புத்தி பலன் ரூ3. பருவம்-மண்டலம்-சமையம் அஷ்ட வர்க்கம் ஆயுள்வரை புத்திபலன் ரூ. 10 (ஜாதகம் முன் பணம் தேவை) 1 வருடம் மாதா மாதப்பலன் ரூ. 2 கேள்வி 6-க்கு ரூ. 1. ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை.

புரோபலர். N. V. சுப்பிரமணியம்
நிர். 6-A. ஜோதிஷ ஆஸ்ரமம்
வாலாஜாபாத் P. O. S. I. R.



அசிங்கப்படுத்தும் சொறி, சிறங்குகளை அகற்றுங்கள்.

ஜாம்பெக்கைப் பூசி உங்கள் சருமத்தை நோயணுகாது காருங்கள்.

எவ்வளவு அற்பமான சொறி சிறங்கு, சிரங்கு ஆனாலும் சரி, உடனே ஜாம்பெக்கை தடவுங்கள். அப்படிச் செய்தால் பெரும் புண்களும், சரும உபத்திரவங்களும் மேற்கொண்டு வராமல் தடுத்துக் கொள்ளலாம், ஜாம்பெக்கிலுள்ள அரிய மூலிகைத் தைலசத்து உங்கள் சருமத்துள் ஊடுருவிச் சென்று வலியைத் தணித்து அசிங்கமான சீழ் முதலியவற்றை நிறுத்துகிறது. தழும்பு சிறிதுமின்றி புண்ணாற்றுகிறது. ஆகையால் ஜாம்பெக்கை ஒழுங்காகப் பூசிவரவும். எல்லா மருந்து வியாபாரிகளும் ஜாம்பெக்கை ரூ. 1க்கும், ரூ. 2-4-0க்கும் விற்கின்றனர்.

ஏஜண்டுகள்:-
மெஸர்ஸ் தாதா அண் கோ, பி. டி. சென்னை.

எப்போதும் ஜாம்பெக் பூசுங்கள்

ZAM-BUK

மிருகக் கொழுப்பு கலவாதது



சேலம் மாம்பழம்

குண்டு, நடுசாலை, மல்கோவா, குதாதாத் முதலிய பழங்கள் விற்பனைக்குத் தயார்.

N. B.— ஆர்டருடன் தங்கள் விலாஸத்தையும் சமீபத்திலுள்ள ரயில்வே ஸ்டேஷனையும் தெளிவாக எழுதவும்.

K. முருகேசன்,
செவ்வாய்ப்பேட்டை, சேலம். S. I.



இண்டோ-லங்கா லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,

ஸ்தாபிதம் 1923. தலைமை ஆபீஸ்:— மெட்ராஸ்.

எல்லோராலும் இன்ஷுர் செய்யக்கூடிய இந்தியக் கம்பெனி.

| | |
|---|---|
| சேலாவணியில் | ரூ. 18,00,000. |
| கொடுக்கப்பட்ட உரிமைத் துகை | ரூ. 4,00,000. |

கவர்ன்மெண்டு ஜாமீன் செலுத்தப்பட்டுள்ளது.
ஏழைகளுக்கேற்றது. தக்க சமயத்தில் உதவுகிறது
மாதப் பிரீமியம் ரூ. 1 முதல் ரூ. 8 வரை.

நாள் ஒன்றுக்கு 2 அணா முதல் 4 அணா வரை மீதப்படுத்தி, பிற்கால ஜீவியத்தை சுகமே கழிக்க இன்றே நீங்கள் இண்டோ—லங்காவில் ஒரு பாலிஸி எடுத்துக் கொள்ளுங்கள்.

இதுவரையும் இக்கம்பெனி பாலிஸிதாரர்களுக்கு 100-க்கு 50 வீதம் தொடங்கி 100-க்கு 100 வரையும் லாபத்துடன் தொகை கொடுத்துள்ளது. இது போன்ற லாபத்துகை கொடுக்கும் கம்பெனிகளுக்குள் தலை சிறந்து விளங்குவது ஐ. எல். எல். எ. கம்பெனி ஒன்றே!

கீழ்க்கண்ட இடங்களுக்கு கமிஷன் அல்லது சம்பளத்தில் வேலைசெய்ய நாணயமும் செல்வாக்கும் நிறைந்த

ஏஜண்டுகள் தேவை.

| | | |
|---|---|---|
| காரைக்குடி | ராயவரம் | கோட்டையூர் |
| நெற்குப்பை | கண்டவராயன்பட்டி | புதுவயல் |
| கொப்பனாபட்டி | நாச்சியாபுரம் | நேமத்துப்பட்டி |
| தேவகோட்டை | கடியாபட்டி | அரிமளம் |
| வலையபட்டி | பொன்னமராவதி | கண்டிரமாணிக்கம் |
| குளிபிறை | பனையபட்டி | கீழச்சிவல்பட்டி |

எல்லா விபரங்களும் நேரில் அல்லது லெட்டர் மூலம் தெரிந்து கொள்ளலாம்.

சீப் ஏஜண்டு: MR. A. L. சொக்கலிங்கம்செட்டியார்,
ஐ. எல். எல். எ. கம்பெனி லிமிடெட்,
சொக்கலிங்கம்புதூர் (Via) ஆத்தங்குடி.
இராமநாதபுரம் ஜில்லா.




# இந்திய சர்க்கார் மலைவாசம்

## டில்லியில் சபை கூடுவதால் அதிகச் செலவு

கோடைகாலத்தில் இந்திய சர்க்கார் சிம்லா செல்லும் விஷயமாக மத்திய சர்க்கார் ஆலோசித்து வருகின்றனர். சட்டசபையை சிம்லாவில் கூட்டுவதைவிட புதுடில்லியில் கூட்டினால் 50,000 ரூபாய் அதிகப்படியாகச் செலவாகுமென்று முன் சட்டமந்திரியாயிருந்த ஸர் யன். யன். ஸர்க்கார் மத்திய அஸம்பிளியில் தெரிவித்தார். ஏனெனில் டில்லியில், மோட்டார்கள் நிறுத்தவும், மோட்டார்கள் வைத்துக் கொள்ளவும் அங்கத்தினர்களுக்குப் பிரத்தியேகப் படி கொடுக்கப்படுகிறது. புது டில்லிக்குக் கொண்டு போய் திரும்ப தங்கள் சொந்த ஊருக்குக் கொண்டுவர மோட்டார் கார்களுக்கு ஏற்படும் செலவை சர்க்கார் கொடுக்கிறார்கள். அவர்களுடைய டிரைவர்களுக்கு மூன்றுவது வகுப்பு ரயில்சார்ஜ் கொடுக்கப்படும். பழய டில்லியில் மெம்பர்கள் இருந்தால், பெட்ரோல் அலவன்ஸாக மாதம் 75 ரூ. கொடுக்கப்படும். காரில்லாத மெம்பர்கள், புது டில்லியில் வசித்தால் மாதம் 50 ரூபாய் வீதமும், பழய டில்லியில் வசித்தால் தினமும் பிரயாணப்படியாக 5 ரூபாயும் பெறுகிறார்கள். தென்னிந்தியாவின் ஒரு கோடியிலிருந்து புது டில்லிக்குக் காரைக்கொண்டு போக ஏராளமான செலவு ஏற்படும். சராசரி பார்த்தால், மத்திய சட்டசபைகளின் அங்கத்தினர்களில் 30 முதல் 50 பேர் வரை இந்த விதியைச் சாதகப்படுத்திக் கொண்டு பழய டில்லியில் வாடகைக்கு வீடமர்த்தி வசிக்கிறார்கள். ஆனால், புது டில்லியில் கவர்ன்மெண்டார் எல்லா மெம்பர்களுக்கும் போதுமான இருப்பிட வசதி செய்திருக்கிறார்கள். இதன் மூலம் கவர்ன்மெண்டார் பெரு நஷ்டமடைகின்றனர். தினமும் 5ரூ. அதிகப்படியாகக் கொடுப்பதுடன், சட்டசபை மெம்பர்கட்காகக் கட்டப்பட்ட வீடுகளுக்கும் வாடகையைக் கவர்ன்மெண்டாரே கொடுக்கின்றார்கள்.

## ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கம், கண்டனூர்

நிகழும் வைகாசித் திங்கள் பதினாறும் நாள் (30-5-39) செவ்வாய்க்கிழமை 2-வது வீதி திரு சி. ராம. அவர்கள் இல்லத்தில் ஷை சங்கத்தின் மூன்றுவது நான்காவது ஆண்டுவிழா சென்னை உயர்திரு. T. K. சிதம்பரநாத முதலியார் B. A., B. L., அவர்கள் தலைமையில் நடைபெறும். அன்று மாலை கம்பரும் அரசியலும் என்பதுபற்றி திரு. R. P. சேதுப்பிள்ளை அவர்களும், பாத் திறம் என்பதுபற்றி திரு. பண்டித லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்களும் (தமிழாசிரியர், அண்ணாமலை சர்வகலாசாலை, நெற்குப்பை) சொற்பொழிவாற்றுவார்கள்.

## ஹிந்துஸ்தான் சாரணர் சங்கம் காரைக்குடி 'நகரக் குரூப்'

13-5-39ல் நகரக் குரூப்பின் கூட்டம் ஒன்று ரோவர் லீடர் தலைமையில் கூடியது. அவ்வமயம் நகரகுரூப்பின் காரியதரிசியான சுப. கா. நாச்சியப்பன் அவர்களது துணைவியார் அகால மரணமெய்தினதைப் பற்றி ஆழ்ந்த அனுதாபத்தை அன்னார் குடும்பத்துக்குத் தெரிவித்துக்கொள்கிறது எனத் தீர்மானிக்கப்பட்டது.

# செட்டிமார் நாட்டு ரோடுகளுக்கு 1·78 லட்ச ரூபாய்

## பஸ் சர்விஸ் நடத்த ஜில்லாபோர்டு தீர்மானம்.

மே 15உ நடைபெற்ற ராமநாதபுரம் ஜில்லா போர்டின் விசேஷக் கூட்டத்தில், மோட்டார் பஸ் போக்குவரத்து நடத்துவது பற்றிய உப கமிட்டியின் யோசனைகள் ஆலோசிக்கப்பட்டன. அடியிற்கண்ட பஸ் பாதைகளில் ஜில்லா போர்டு பஸ் நடத்துவதென்ற யோசனை அங்கீகரிக்கப்பட்டது:

1. திருப்பத்தூரிலிருந்துகாரைக்குடி வழி தேவகோட்டைக்கு
2. காரைக்குடியிலிருந்து நேமத்தான்பட்டிக்கு
3. கோட்டையூரிலிருந்து புதுவயல் வழி கண்டனூருக்கு
4. திருப்பத்தூரிலிருந்து சிங்கம்புணரிக்கு
5. திருப்பத்தூரிலிருந்து நெய்க்குப்பைக்கு
6. திருப்பத்தூரிலிருந்து சிவகெங்கைக்கு
7. திருப்பத்தூரிலிருந்து கீழச்சிவல்பட்டிக்கு
8. அருப்புக்கோட்டையிலிருந்து விருதுநகருக்கு
9. ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்து சாத்தூருக்கு
10. பரமகுடியிலிருந்து முதுகுளத்தூருக்கு
11. சிவகெங்கையிலிருந்து கமுதிக்கு
12. மதுரையிலிருந்து அருப்புக்கோட்டைக்கு.

### புது ரோடுகள்

ரயில்வே நிதியிலிருந்து, செட்டிமார் நாட்டின் உட்பிரதேசத்தில் கிராமாந்தரங்களுக் கிடையே புது ரோடுகள் போட ஒரு லட்சத்து எழுபத் தெண்ணாயிரம் ரூபாய் அனுமதிக்கப்பட்டது. தற்சமயம் இப்பிரதேசத்தில் சுமார் 35 ரோடுகள் போடப்பட்டு வருகின்றன. ஜில்லா போர்டின் பிரதேசத்தில் ரோடுகள் போடும் விஷயமாக ஒரு ஐந்து வருடத்திட்டம் தயாரிக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டது.

புது மடத்தில் கிராம வைத்தியசாலையை வைத்திருக்கவும், சாயல் குடியிலும் போகலூர் முதலிய ஊர்களிலும் இங்கிலீஷ் வைத்தியசாலைகளும், நயினார் கோயிலில் ஒரு ஆயுர்வேத வைத்திய சாலையும் ஏற்படுத்த தீர்மானிக்கப்பட்டது. ஜில்லாவிலுள்ள பல ரோடுகளையும் பராமரிக்க 74,210 ரூபாய் அனுமதிக்கப்பட்டது காஞ்சிரங்குடி போர்டு ஸ்கூலில் மதக்கல்வியும் அரபு மொழியும் கற்பிக்க ஒரு ஆசிரியர் நியமிப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.

# ஜீவர்கள் தமதிடர் தீர்வது எக்காலம்?

[தாயுமானவர் சீடன் புலம்பல்]

கண்ணிகள்

அனைத்துயிருமீசன் அவனுறையுங் கோயிலென,
நினைத்து வுயிர்கொல்லா நினைப்பெழுவ—தெக்காலம்?

ஆட்டையறுத் துண்ணும் அநியாயப் பேய் வழக்கம்
நாட்டைவிட்டேகி நசித்திடுவ—தெக்காலம்?

இன்றைக் கிருந்து இடிங்கொருநாள் வீழுதற் காய்
ஒன்றைக் கொன்றுண்ணு தொளிர்வதினி—எக்காலம்?

ஈசன்படைத்தே இலங்கும் எழிலுருவை
நாசஞ்செய் யாதுயிர்க்கு நலம்புரிவ—தெக்காலம்?

உத்தமராம்புத்தர் உரைத்திடுநற்போத முணர்ந்
தித்தரணிதன்னி லுயிர்க் கிரங்குவது—மெக்காலம்?

ஊனுணுஉத்தமர்தாம் உலகுதனி லேமல்கித்
தான்வுயிரெலாந் துன்பத் தளையறுப்ப—தெக்காலம்?

எவ்வுயிருந்தன் னுயிர்போ லெண்ணும் தபோதனராய்
இவ்வுலகரெல்லா மிருப்பதினி—எக்காலம்?

ஏனத்தின்புண்ணையுண எண்ணமனந் தான்கொதிக்கும்
ஈனத்தனஞ்செய்யா திருப்பதினி—எக்காலம்?

ஐயன்சிவனருளால் ஆக்கும் உயிர் தம்மை
வையத்தவர்கொல்லா வினைபடைப்ப—தெக்காலம்?

ஒருயிருங்கொல்லா ஒருமையுடைத்தாயுலகோர்
தோருளைநாடித் தினம்பணிவ—தெக்காலம்?

ஓயா துயிரினங்கள் ஓலமிடத் தான்வதைக்கும்
தீயாங்குணமதனைத் தீய்ப்பதினி—எக்காலம்?

ஔவைதிருவள்ளுவனார் அரியமொழிப்படியே
இவ்வையத் தின்னுயிருக் கிரங்குவது—மெக்காலம்?

கண்ணனிந்தமண் ணுலகில் கருணையுடன் மேய்த்த பசு
புண்ணுருக் தன்மைதனைப் போக்குவது—மெக்காலம்?

நற்கந்தமுள்ளமரக் காய்கறிகள் தன்னையுண்டு
துற்கந்தம் வீசுபுலால் துடைப்பதினி—எக்காலம்?

பொங்கலென்றுந் தின்னவென்றும், பொறுமைநிறை ஆடுதனைப்
பங்கமதுபண் ணும் பழியொழிப்ப—தெக்காலம்?

ஆலயத்தில்ரத்தம் அருவியென ஓடச்செய்
சீலமிலாத் தீநெறிதான் சென்றொழிவ—தெக்காலம்?

அண்ணலவன் தாயுமானர் அன்புடனே தானுரைத்த
வண்ணமுயிர்போற்றி வாழ்விப்ப—தெக்காலம்?

# கப்பல் செய்திகள்

## பினங்குக்கும் நாகபட்டினத்திற்கும் (ஏஜெண்டிடமிருந்து)

### வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகபட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா 8478 டன் | 25—5—39 |
| ரோணா 8602 டன் | 8—6—39 |
| ரஜூலா 8478 டன் | 11—6—39 |
| ரோணா 8602 டன் | 6—7—39 |

### புறப்படுதல்

கப்பல்கள் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விவரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா 8478 டன் | 3—6—39 |
| ரோணா 8602 டன் | 17—6—39 |
| ரஜூலா 8478 டன் | 1—7—39 |

### பிரஞ்சு மெயில்

புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர், சைகோன் புறப்படும் கப்பல்கள்:-

| | |
|---|---|
| தர்தாஞான் 21000 டன் | 5—6—39 |
| ஸ்பிங்ஸ் 10000 டன் | 3—7—39 |
| லெகொண்டி டி லிஸ்லெ 15000 | 2—8—39 |

பிரெஞ்சு-மெயில் விவரங்களுக்கு:
H. B. ஹூசேன் & சன்ஸ்,
கப்பல் ஏஜண்டுகள், புதுச்சேரி.

### P. & O. மெயில்

கொழும்பிலிருந்து, நேராக பினங்குக்குப் புறப்படும் கப்பல்களின் விவரம் வருமாறு:-

| | |
|---|---|
| ராவல்பிண்டி 17,000 டன் | 28—5—39 |
| கான்டன் 16,000 „ | 11—6—39 |
| கார்பூ 15,000 „ | 25—6—39 |
| சித்ரால் 15,000 „ | 9—7—39 |

## புகையிலை வரி சட்ட அமுல்

(நமது நிருபர்)

இராமநாதபுரம் ஜில்லாக் கலக்டரவர்கள் ஜில்லாவிலுள்ள எல்லாக் கிராம உத்யோகஸ்தர்களுக்கும் புகையிலை வரி மசோதா விஷயமாய் உள்ள தகவல்களைத் தெரிந்து இரண்டு பதில் காப்பிகள் அனுப்புமாறு அறிக்கை விடுத்திருக்கிறார்கள். அதன் காரணமாக கிராம உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் விவரம் தயாரிக்கும் விஷயத்தில மிகச் சிரத்தை எடுத்து வேலை செய்து வருகிறார்கள்.


காரைக்குடி ஸ்ரீ ஷண்முகவிலாஸில்—மகத்தான 3வது வாரம்
நாடகம் :: ஸ்ரீ கிருஷ்ண லீலா :: நாடகம்
M. S. B. S. சபையார்.

# விஞ்ஞானம் :: விநோதம்

### யந்திர மனிதன்

நியுயார்க் உலகப் பொருட்காட்சியில் புதிதாகச் செய்யப்பட்ட மின்சார யந்திரமனிதனை வைத்திருக்கின்றனர். 'எலக்டிரோ' என்பது அவன் பெயர். 7 அடி உயரம்; 260 ராத்தல் எடை. அலுமினிய உடை. முன்னே பின்னே நடப்பான். ஒருகால் மட்டுமே மடங்குகிறது. எந்தக் கையையும் தூக்கி வணக்கஞ் செலுத்த முடியும். கைவிரல்களால் ஒன்று முதல் பத்துவரை எண்ணுகின்றான். ஒவ்வொரு விரலையும் மடக்கி எண்ணலாம். இந்த மாதிரி இருபத்தாறு வேலைகளைச் செய்கின்றான். சிகரட் புகைப்பான் சிகரட் புகையை நாசித்துவாரத்தினூடே வெளிப்படுத்துவான்.

### மணலிலிருந்து மின்சாரம்

ஒலி பரப்புதற்கு இன்றியமையாத 'வால்வை'க் கண்டுபிடித்த 89 வயதுள்ள விஞ்ஞானி ஸர் அம்புரோஸ் பிளமிங் என்பவர், மின்சாரம் உற்பத்தி செய்யப் புதுமுறை யொன்றைக் கண்டுபிடித்திருக்கிறார். மணலை, துவாரமிட்ட துத்தநாகத் தகடு வழியே விழச் செய்தால் மின்சாரம் உண்டாவதாக அவர் செய்து காண்பித்தார்.

### அமெரிக்க 'பீமன்'!

அமெரிக்காவில், கென்றக்கியில் ஒரு இளம் 'பீமன்' வளர்ந்து வருகிறான். பிறந்து பதின் மூன்று மாதமே ஆன போதிலும், இக்குழந்தை 70 ராத்தல் எடையும் மூன்றடி உயரமு மிருக்கிறதாம். பிறந்தவுடன் அதன் எடை 10½ ராத்தல். பிராயத்தில் இவன் அக்காட்டிலேயே மிகப்பெரிய மனிதனாக இருப்பான் என்று டாக்டர்கள் சொல்கின்றனர்.

### கிளியிலிருந்து இளமை

இளமை யளிக்கும் மருந்து செய்வதற்காக இந்தியாவிலிருந்து சுமார் இரண்டாயிரம் கிளிகள் வரை ஜெர்மனிக்குச் செல்லப்போகின்றன. பஞ்சாபிலிருந்து தான் இதில் பெரும்பகுதி அனுப்பப்படு மென்று தெரிகிறது.

### இலையிலிருந்து பெட்ரோல்

காய்ந்த இலைகளிலிருந்து பெட்ரோல் செய்ய ஜர்மனி முயற்சித்து வருகிறது. கருங் கானகப் பிரதேசத்தில் இதற்கு வேண்டிய யந்திர தளவாடங்களை அமைத்திருக்கிறார்கள். டண் கணக்காக உதிர்ந்த இலைகள் சேர்க்கப்பட்டுக் கொட்டப்படுகின்றன. 800 பவுன் செலவில் இதுவரை ஒரு காலன் மட்டரகப் பெட்ரோலே செய்ய முடிந்ததாம்.

### செவ்வாய் கிரகம்

செவ்வாய் கிரகத்தைப் பற்றிய பல நூதன விஷயங்களை இவ்வருடம் தெரிந்து கொண்டு விடலாமென வான சாஸ்திரிகள் எதிர்பார்க்கிறார்கள். சென்ற பதினைந்துவருஷகாலமாக இந்த கிரகம் இருந்ததைவிட, இவ்வருடம் 2,80,00,000 மைல் பூமிக்குச் சமீபமாக இருக்குமாம். தாவரமும், மிருகங்களும் அதில் இருக்கின்றனவா என்பதைத் தெரிந்துகொள்ள முயற்சிக்கிறார்கள்.

### கலர் முட்டை

கலர் முட்டைகள், பல கலர் தோடுகள், கலர் கருக்களை உடைய முட்டைகளை அமெரிக்க கவர்ன்மெண்டு விஞ்ஞானிகள் உற்பத்தி செய்து விட்டார்கள். கோழிகள் பல கலர்களிலும் முட்டைகள் இடும்படி இவர்கள் செய்து விட்டார்கள். சில கோழிகளிடும், ஒரே முட்டையில் கருவில் அடுக்கடுக்காகப் பல கலர்கள் இருக்கின்றனவாம்!

### இந்துமத பாடசாலை, வாலாஜாபாத்

இப்பாடசாலை இருபத்து மூன்று ஆண்டுகளாகச் சிரிய முறையில் நடந்து வருவது. பல அறிஞர்கள் நேரிற் பார்த்துப் பாராட்டியிருக்கின்றனர். அரசியல் திட்டத்தின்படி எட்டாவது வகுப்புவரை கல்வி கற்பிக்கப் பெறுகின்றது. அத்துடன் தொழிற்கல்வியும் மாணவர்கள் கற்கின்றனர். நெசவு செய்தல், தையல், தச்சு, கலாய், புத்தகங் கட்டல், பொத்தான் செய்தல், நூல் நூற்றல் முதலிய தொழில்கள் கற்பிக்கின்றோம். இங்குள்ள பெரிய பயிர்ப்பண்ணையின் வாயிலாக மாணவர்கள் பயிர்த்தொழிலைக் கற்றுக் கொள்ளுகின்றார்கள். தேனீ வளர்த்தலும் கோழிப் பண்ணையும் நடந்து வருகின்றன.

பாடசாலையின் சார்பில் பெரிய மாணவர் இல்லம் அமைந்துள்ளது. எல்லா இனத்தைச் சேர்ந்த மாணவர்களையும் இலவசமாகவும், குறைந்த கட்டணத்துக்கும் சேர்த்துக் கொள்ளுகின்றோம். ஏழை ஆதித்திராவிட மாணவர்கள் இலவசமாகச் சேர்ந்து நலம் பெறலாம். எல்லா மாணவர்களும் மே மாதம் 30-ம் தேதிக்குள் விண்ணப்பஞ் செய்ய வேண்டும். விண்ணப்பத்தாள் தேவையானவர்கள் ஒரு அணு தபாற் சீட்டுடன் எழுதிப் பெற்றுக் கொள்ளலாம் என்று காரியதரிசி எழுதுகிறார்.

---

'மாதிரிக் கிராமங்கள்' மூன்று தயாரிப்பதென, அலகபாத் ஜில்லா கிராம அபிருத்தி சங்கம் தீர்மானித்திருக்கிறது.

### மலேயாப் பிரயாணிகளின் கஷ்டம்

திருப்பத்தூர் தாலூகா கவர்ன்மெண்டு தாசில்தாரிடம் அத்தாட்சிப் பத்திரம் வாங்க வந்த அநேகர் 4-5-39 ல் கோர்ட்டில் ஆஜராகி 12 அணு கோர்ட் பீஸ் ஸ்டாம்புகள் ஒட்டிக்கொடுக்கலான மனுவை தாசில்தார் பார்வைசெய்து அவர்களின் வாக்கு மூலங்களிலிருந்து மனுவை ரத்து செய்துவிட்டார்கள். பஞ்ச காலக் கொடுமை சகிக்க முடியாமல் தங்கள் சொந்தக்காரர்களிடம் போய் ஏதேனும் ஜீவனம் செய்ய எத்தனித்த இப்பிரயாணிகளின் மனு தள்ளுபடியான செய்தி கேட்டு அதிக மனவேதனை அடைந்த காக்ஷி மிகவும் பரிதாபமாக இருந்தது.

இன்னும் அனேக கிராம ஜனங்களுக்கு இது காரணம் தெரியாமல் ஓடி ஆடித் திரிகிறார்கள். இந்த நெருக்கடியான சந்தர்ப்பத்தில் பிரயாணிகள் சிறிது பொருள் செலவும் செய்து பிரயாணத்தை நிச்சயித்து யோக்யாம்ச பத்திரம் வாங்கவரும் சமயம் மனமுடைந்து கவலைப்படுகிறார்கள். ஆகவே பொது ஜனங்கள் பிரயாணத்தால் பணச்செலவு ஏற்படாமலும் எவ்வித யோக்யதாம்சமுடையவர்கள்தான் பிரயாணப்படலாமென்ற விவரம் பொது ஜனங்களறிய மலேயா எமிக்கிரேஷன் கமிஷனரவர்கள் அறிக்கை வெளியிட்டால் மிக நலமென திருப்பத்தூர் ஸ்ரீ எஸ். வெள்ளைச்சாமி எழுதுகிறார்.

---

மே 19உ காலை கூவம் ஆற்றில் ஓர் பிறந்த குழந்தையின் பிரேதம் மிதந்தது. இதைப் போலீசார் அப்புறப்படுத்தினர். இக் குழந்தையைப் பிறந்தவுடன் விட்டெறிந்ததாகச் சொல்லப்படுகிறது. குற்ற இலாகா அதிகாரிகள் விசாரணை செய்து வருகின்றனர்.

West End 'IND' ALARM

வெஸ்ட்டு எண்டு 'இண்டு' தடர்ந்தும், விட்டு விட்டும் அடிக்கக்கூடியது. உயரம் 6" அகலம் 4.7/8"
இதே விலையுள்ள அலாரம் டைம்பீசுகளில் இதுவே மிக சேர்த்தியானதும் மலிவானதுமான கடிகாரம்.
சாதா டயல் ரூ 5½
ரேடியம்டயல் ரூ 6½

Rs. 5/8

CONTINUOUS-INTERMITTENT

பெரிய இலவச கேட்லாக்குக்கு எழுதுங்கள்
வெஸ்டு எண்டு வாச்சு கம்பெனி,
பம்பாய் & கல்கத்தா.
WEST END WATCH CO.,
BOMBAY CALCUTTA

ஜோதிட பரிபாலினி

இஃது ஜோதிட சம்மந்தமான மாதப்பத்திரிகை. திருமகள் பஞ்சாங்க ஆசிரியர் S. அப்பாஜி ஜோஸ்யர், மேற்படியார் குமாரர் S. A. முத்து இவர்களை ஆசிரியராகக்கொண்டு வெளிவரும். இதில், ஜோதிடம் கற்றுக்கொள்ளவும், பஞ்சாங்கம், கிரகணம், பாதசாரம் முதலியவற்றைக் கணிக்கவும், ஆசானில்லாமல் எளிதிற் கற்றுக்கொள்வதற்கு வேண்டிய விஷயங்கள் தெளிவாக வெளி வருகின்றன.

இன்னும் ஒரு முக்கிய விசேஷம், சந்தாதாரர்களின் நக்ஷத்திரப்படி ஒவ்வொரு மாதமும் தினபலன் கணித்து சந்தாதாரர்களின் நக்ஷத்திரரீதியாய், சஞ்சிகையில் அனுப்பப்பெறும். ஜாதகம் அல்லது பிறந்த (ஹு-மீ) தேதி, நேரம் இவைகளை விவரமாக எழுதி, சந்தாத் தொகையுடன் கொடுத்து ஆண், பெண் யாவரும் பதிவு செய்துகொள்ளலாம். குழந்தையின் ஜாதகத்திலிருந்தும் குடும்பத்திற்குப் பலன் எழுதலாம். சொற்பச் செலவில் கிடைக்கும். இந்த அரிய சந்தர்ப்பத்தை உபயோகப்படுத்திக் கொள்ளும்படி, கேட்டுக் கொள்ளுகிறோம். இதற்கு வருட சந்தா ரூபாய் 2—0—0.

விலாசம்:-- S. அப்பாஜி ஜோஸ்யர், (ஆசிரியர்),
60, ராஜவீதி, கோயமுத்தூர்.

கோட்டைக்கல் மருந்துகள் கொச்சி நவரத்ன பார்மஸி மருந்துகள் விலை சகாயமாய்க் கிடைக்குமிடம்.
ஸ்ரீ தெண்டாயுதபாணி மெடிகல் ஹால்,
காரைக்குடி.

பாங்கிகள், கவர்ன்மெண்டு ஆபீஸ்கள், கோவாபரேடிவ் சொஸைடிகள், நாட்டுக்கோட்டை நகரத் தனவான்கள், இதர கனதனவான்கள், சகல வியாபாரிகளுக்கும், நாணயமாக சப்ளை செய்துகொண்டு வரப்பட்ட
G. கன்னையா கம்பெனி,
இரும்பு பெட்டி வியாபாரம்,
137, பிராட்வே, மதராஸ்.



## ஓ. சிறுவயலில் புதிய கட்டிடத் திறப்பு விழா

### ஸ்ரீ குமாரசாமி ராஜா ஆற்றினர்

ஓ சிறுவயலில், சுமார் 12,000 ரூ. செலவில் கட்டி முடிக்கப் பெற்றிருக்கும் ஸ்ரீ பொன்னழகி அம்பாள் வித்யாசாலையின் புதிய கட்டிடத்தை மே 21உ மாலை ராமனுதபுரம் ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ. பி. எஸ். குமாரசாமி ராஜா M. L. A. திறந்து வைத்தார்.

அன்று மாலை 4 மணிக்கு திரு. குமாரசாமி ராஜா எம். எல். ஏ., பூலாங்குறிச்சி திரு. வ. சொ. ராம. வள்ளியப்பா எம். எல். ஏ., திரு. கருமுத்து சிவலிங்கம் செட்டியார், திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார் முதலியவர்களை ஸ்ரீ பொன்னழகி அம்மன் கோவிலிலிருந்து ஊர்வலமாகப் பள்ளிக்கூடத்துக்கு அழைத்துச்சென்றார்கள். திரு. குமாரசாமி ராஜா அவர்கள், கட்டிடத்தைத் திறந்துவைத்தவுடன், திரு. கருமுத்து சிவலிங்கம் அவர்கள் தேசியக் கொடியை ஏற்றி வைத்து அதன் தத்துவத்தைப்பற்றியும் ஜில்லா போர்டார் வேலைகளைப் பற்றியும் பொதுஜனங்களின் கடமையைப்பற்றியும் நகரத்தாரின் புது தர்மத்தைப்பற்றியும் எடுத்துக் கூறினார்கள். நகரத்தார்கள் முன் காலத்தில் லட்சக் கணக்கான பொருளைச் செலவு செய்து பல தேவாலயங்களையும், வேத பாடசாலைகளையும் அன்ன சத்திரங்களையும் கட்டினார்களே யன்றி, இம்மாதிரிக் கல்விச்சாலைகளைக் கட்ட முன்வராதது பெருத்த துரதிர்ஷ்டமென்றும், அவ்வாறு கட்டியிருந்தால் நம்மக்கள் உயர்ந்த நிலையில் கல்வியைக் கற்றிருப்பார்களென்றும், காலத்திற்கேற்ப நகரத்தார்கள் இவ்வித்தியாசாலையைக் கட்ட முன்வந்திருப்பது பாராட்டத் தக்கதென்றும் அவர் கூறினார். திரு. குமாரசாமி ராஜா அவர்களுக்கு நகரத்தார்களின் சார்பில் ஸ்ரீ சுப. அ. மலையாண்டி செட்டியாரவர்களால் வந்தனோபசாரப் பத்திரம் வாசித்தளிக்கப்பெற்றது. அதற்குப் பதில் கூறும்பொழுது வடக்குப் போர்டும் தெற்கு போர்டும் ஒன்று சேர்த்ததில் ஒன்றும் வித்தியாசம் பாராட்ட முடியாதென்றும், வடக்கு போர்டைக்காட்டிலும் தெற்கு போர்டில்தான் குறைந்த ரஸ்தாக்களும் ஆஸ்பத்திரிகளு மிருக்கின்றன வென்றும், தங்கள் பகுதியார் வடக்கு போர்டுக்கு அதிகச் சலுகை காட்டுவதாகத் தம்மிடம் சொல்லுகிறார்களென்றும், அதற்குப் பதில் சொல்லும் போது செட்டியார்கள் பல ரஸ்தாக்களையும் பள்ளிக்கூடங்களையும் ஆஸ்பத்திரிகளையும் கட்டிக்கொடுத்திருப்பதால் போர்டு நிர்வாகச் செலவுமட்டும்தான் செய்கிறதென்று சொல்லுவது வழக்கமென்றும், இப்பொழுதிருக்கும் பொருளாதார நிலையில் அதையும் ஒப்புக்கொண்டு நிர்வாகம் பண்ண முடியவில்லை யென்றும், அடுத்த வருஷ பட்ஜட்டில் தொகை ஒதுக்கி ரோடுகளையெல்லாம் செப்பனிட முடியுமென்றும் அவசரப்படக் கூடாதென்றும் கூறினார்கள். நகரத்தார்கள் ஏராளமாகக் காங்கிரஸில் சேரவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

திரு. வ. சொ. ராம. வள்ளியப்பா அவர்கள் எம். எல். ஏ., காந்தி அடிகளின் படத்தைத் திறந்துவைத்து பேசும் பொழுது காந்தி அடிகள் தான் நமது தலைவரென்றும், செட்டியார்களில் பெரிய வயதுடையவர்களும் சேர்ந்து உழைக்கவேண்டுமென்றும், காங்கிரஸால் தான் பணக்காரர்களைப் பாதுகாக்க முடியுமென்றும், காலத்துக்குத் தக்கபடி நாமும் நடந்து கொள்ள வேண்டுமென்றும் காங்கிரஸ் கொள்கைகளை விளக்கிக் கூறினார்கள்.

அப்பால் ஸ்ரீ ஜவஹர்லால் நேரு படத்தைத் திறந்துவைத்து திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் பேசும் போது தனவைசியர்களைப் போல பணக்கார குடும்பத்தில் பிறந்த ஜவகர்லால் அவர்கள் குடும்பமே காங்கிரசுக்கு அதிகத் தியாகம் செய்திருக்கிறதென்றும், செட்டியார்களும் அதுபோல தியாகம் செய்தால் மதிக்கப்படுவார்களென்றும், இளைஞர்கள் அதிகம் பங்கெடுத்துக் கொண்டிருப்பது போல முதியோர்களும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டுமென்றும், போராட்டம் வந்தால் இளைஞர்கள் தயாராக இருப்பார்களென்றும் அதிலும் ஓ. சிறுவயல் இளைஞர்கள் அதிக தைரியசாலிகளென்றும், நமது பெண் மணிகளும் காங்கிரசுக்கு உழைக்க வேண்டுமென்றும், ஜில்லா போர்டார் இப்பகுதியைச் சரிவரக் கவனிக்கவில்லை யென்று ஜவஹர்லால் கூடச் சொன்னார் என்றும், இப்பகுதியிலுள்ள ரோடுகள் மிக மோசமாக இருக்கின்றன வென்றும், வேறு எந்தப்பகுதியிலும் இப்படி மோசமில்லை யென்றும், அதை காங்கிரஸ் போர்டார் கவனிப்பார்களென்று தாம் நம்புவதாகவும், உணர்ச்சியாக ஜவஹர் குடும்பத்தின் சேவையைப் பாராட்டிப்பேசினார்கள். அப்பால் தலைவர் முடிவுரை கூற சிறுவர் சிறுமியர் பாட்டு பேச்சு நடிப்புடன், வந்தனம் கூறி இரவு 8 மணிக்கு வைபவம் முற்றுப் பெற்றது. அன்றிரவு ஸ்ரீ சுப. அ. இல்லத்தில் நகரத்தார்களின் சார்பாக வந்திருந்த அனைவருக்கும் சிறந்த முறையில் விருந்தளிக்கப்பட்டது.

உங்களுக்குத் தேவையான
எலெக்ட்ரிக் சாமான்கள்
கட்டிடச் சாமான்கள்
தண்ணீர்ப் பம்புகள்
பம்ப்பு-மோட்டார்கள்
சிமிந்தி, பெயின்டு
சோப்பா, டேபிள், சேர் பர்னிச்சர்கள்
இங்கிலீஷ், தமிழ் டைப்ரைட்டர்கள்
முதலிய எல்லா சாமான்களும்
சல்லிசான விலைக்கு
எங்களிடம் கிடைக்கும்
சௌத் இந்தியா கார்ப்பொரேஷன்
(மதராஸ்) லிமிடெட்,
காரைக்குடி.

தாஸ் வாத சம்காரி சிந்தூரம்
தாஸ் வாத சம்காரி தைலம்.

சித்த வைத்தியத்திலும் நாடிப் பரீக்ஷையிலும் நிபுணர். டாக்டர்களால் கைவிடப்பட்ட கொடிய சீக்குகளை தீர்த்து எங்கும் புகழ்பெற்றவர். சுகமடையாத வியாதிகளை சுகப்படுத்தும் வல்லமை யுடையவர்.

நீங்கள் அநேக மருந்துகள் அருந்தியும் உங்கள் வியாதி சுகமடையாமல் கஷ்டப்படுகிறீர்களா? அப்படியிருந்தால் வைத்தியத்தில் சிறந்த பங்காருதாஸுக்குத் தெரிவியுங்கள். எவ்விதமான சீக்காயிருந்தாலும் சௌக்கியம் செய்வார். மூலிகை, உப்பு, இவைகளால் தயார் செய்த தாஸ்வாத சம்காரி சிந்தூரம், தாஸ்வாத சம்காரி தைலம், செந்தூரத்தை அருந்தியும், தைலத்தைதேய்த்தும் துன்பத்தைத் தீர்த்துக் கொள்ளுங்கள். எல்லா ரோகங்களுக்கும் கைகண்ட மருந்து

சுரம் 54, சன்னி 13, வலிப்பு 3, வாதம் 80, சூலை 18, இருமல் இளைப்பு காசம் 5, க்ஷயம் 4, பக்கவாதம், பாரிசவாதம், முடக்குவாதம், இளம்பிள்ளை வாதம், அடிக்கடி மய்க்கம், தேகத்தில் எரிச்சல், தள்ளாடி வீழ்தல், வெட்டை முற்றி மொழிக்கு மொழி வீக்கம், வாய்பேச முடியாமல் கோணலாய் இருப்பது, குழந்தை, கெர்ப்பஸ்திரீ பெரியவர் இவர்களுடைய இசிவு, சகலவிதமான ரோகங்களும் தீர்ந்து, நல்ல ரத்தபுஷ்டியை உண்டுபண்ணி, புத்திர சந்தானத்தையும் உண்டாக்கி விடுகிறது.

தாஸ்வாத சம்காரி சிந்தூரம் 50 வேளையடங்கிய பாட்டில் 1-க்கு ரூ. 25.
தாஸ்வாத சம்காரி தைலம் 24 அவுன்ஸ் பாட்டில் 1-க்கு ரூ 20.
பாக்கிங் அண்டு தபால் கூலி வேறு.
மருந்து உபயோகிக்கும் விதம் பார்சலுடன் கிடைக்கும். மருந்துக் கேட்லாக்கு இனமாய் அனுப்பப்படும்.

என். வி. எம். பங்காரு தாஸ்,
தாஸ் சித்த வைத்திய ஔஷதாலயம்,
(ராமச்சந்திரபுரம், புதுக்கோட்டை ஸ்டேட்.)

( A new successful treatment for )
HYDROCELE, HERNIA, FILARIA, VARICOCELE GOITRE & TUMOUR ETC.,

ZEMADI:- Is the surest, the safest and the simplest herbal remedy of Unani medical science that renders surgical aid quite unnecessary. Only few day's external application reduces the swelling parts to natural condition by way of prespiration. It cures promptly, surely and radically all types of Hydrocele, Varicocele Elophantiasis, Goitre and Scrotal Tumour etc, etc, of any size and standing without causing any pain, blister or a hindrance in one's daily routine. Hernia comes to its proper position, is never displaced again. Just give ZEMADI ointment a fair trial and be convinced of its sterling qualities. Price One Tin (Full course) Rs. 4. Postage extra.

Write in English to:- THE ZAIN & BROS., MUTTRA (U. P)

பிரதிதினமும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கண்டு பிரமித்துச் செல்கின்றார்கள்!
மாயக் காட்சிகள்! உன்னத நடனங்கள்!! உயரிய நடிகர்கள்!!!
எங்கே? ஸ்ரீ கிருஷ்ண லீலா வில் —
T. K. S. சகோதரர்கள், புரொப்ரைட்டர்ஸ்.

குமரன்

காரைக்குடி
பிரமாதி-ஸு வைகாசி-மீ 11உ

## இலங்கை இந்தியருக்கு ஆபத்து

தங்களிடம் தினச்சம்பளத்திற்கு வேலைபார்க்கும், சகல இலங்கையரல்லாத ஊழியர்களையும், அவரவர் தாயகம் அனுப்பி விடுவதென்ற முடிவுக்கு இலங்கை சர்க்கார் வந்திருப்பது, இந்தியருக்கு அதிக வருத்தத்தைத் தருஞ் செய்தியாகும். தற்சமயம் ஐந்து வருஷத்திற்கிடையில் வேலையில் நியமிக்கப்பட்ட தொழிலாளிகளை மட்டும் நாடு கடத்த உத்தேசிக்கப்பட்டாலும், அடுத்துவரும் சிக்கனத் திட்டத்தில், மற்றவர்கள் கதியும் அதேகதி தான் என்பது இலங்கை வரவு செலவுக் காரியதரிசியின் அறிக்கையிலிருந்து புலனாகின்றது. இலங்கையரல்லாதார் என்று பொதுப்படையாகக் குறிப்பிடப்பட்ட போதிலும், இந்தத் தீர்மானத்தின் மூலம் மிகுதியும் பாதிக்கப்படுபவர் இலங்கையில் தொழில் நிமித்தம் குடியேறியுள்ள ஆயிரக்கணக்கான இந்தியர்கள்தாம் என்பதில் ஐயமில்லை.

இலங்கையரிடையே தோன்றியுள்ள கடுமையான வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்கு இந்த முறையைக் கையாளப் போவதாக அதிகாரிகளும் அரசியல் வாதிகளும் கூறுகின்றனர். இப்பொழுது, தினசரிச் சம்பளம் பெறும் இலங்கையரல்லாதார் அந்நாட்டில் எண்ணாயிரம் பேர் இருப்பதாகக் கூறப்படுகிறது. இலங்கையருக்கு வேலை கொடுக்க வேண்டுமென்ற நோக்கத்துடன், இந்தியருக்கு ஒரு மாத நோட்டீஸ் கொடுத்து கப்பற்செலவும், ஒரு மாதச் சம்பளமும் உதவி, சொந்த ஊருக்கு நாடுகடத்தப் போகிறார்கள். இது, இந்தியருக்கு இலங்கையர் இழைக்க விரும்பும் பெருத்த அநீதியன்றோ?

இலங்கையும் இந்தியாவும் பூமண்டலம் தோன்றிய காலந்தொட்டு பல்வேறு வழிகளில் இணைக்கப்பட்டிருக்கின்றன. இரு நாடுகளுக்கும் இடையேயுள்ள சுருங்கிய தூரம் சுமார் பதினைந்து மைல்தான். முன் காலத்தில் தென்னாட்டார், இலங்கையைத் தாய்நாட்டின் ஒரு பாகமெனவே கருதி அங்கு குடியேறி, அந்நாட்டின் இயற்கை வளத்தைப் பண்படுத்திச் செழிப்புறச் செய்தனர். இரு நாடுகளும் அரசியல் முறையில் இணைக்கப்பட்டிருந்த காலமுமுண்டு. ஆனால் பிரிட்டிஷார் தம் சுயநலங் கருதி, இலங்கையைத் தனிக் காலனியாக இந்தியாவிலிருந்து பிரித்து வேறுபடுத்திய நாள் முதல் இலங்கையர் மனத்தில் இந்தியர் வேற்று நாட்டார் என்ற துவேஷ உணர்ச்சி தோன்றிற்று. அன்று ஊன்றப்பட்ட விரோத உணர்ச்சிதான் இன்று இந்தியரை நாடு கடத்த வேண்டுமென்ற இலங்கை சர்க்காரின் உத்தரவாகப் பரிணமித்திருக்கின்றது.

இலங்கைக் காடுகளை வெட்டிப் பண்படுத்தி, தேயிலைத் தோட்டங்களாகவும், ரப்பர் தோட்டங்களாகவும் மாற்றியது இந்தியத் தொழிலாளிகளன்றோ? இந்த உழைப்புக்குக் கைம்மாறு, இந்த நாடுகடத்தும் திட்டந்தானா? இலங்கையை வளப்படுத்த இந்தியர் செய்துள்ள ஊழியத்தை இலங்கையர் எண்ணிப் பார்த்தால், வெள்ளையரின் சூழ்ச்சி வசப்பட்டு, இம்மாதிரி அநீதியான உத்தரவு போடத்துணிவரோ?

இந்தியத் தொழிலாளருக்கு விரோதமாக ஏற்பட்டுள்ள இந்த நடவடிக்கைகளை நிறுத்த பிரிட்டிஷ் சர்க்கார் எதுவும் செய்யவில்லை. இரு நாடுகளும் பிரிட்டிஷார் ஆட்சியில்தானே யிருக்கின்றன! இது விஷயமாக இந்தியர்கள் எவ்வளவோ கிளர்ச்சி செய்தும், இந்திய சர்க்கார் எதுவும் செய்யக் காணோம்.

நீண்டகாலம் சகோதரர்கள் போல் நேசபாவத்துடன் இருந்துவரும் இலங்கையர்—இந்தியர் உறவுக்கு இம்மாதிரிக் கொடுமையான நடவடிக்கைகளின்மூலம் பெரும் பாதகம் ஏற்படுமென்பதை இலங்கையர் உணர வேண்டும். இலங்கை—இந்தியா வியாபாரத்திலும் இது காரணமாக பல சங்கடங்கள் ஏற்படக்கூடும். இரு நாட்டினரிடையே துவேஷ உணர்ச்சி பலப்பட்டு வருவதைப் பிரிட்டிஷார் தடுக்காமலிருந்து வருவது மிகவும் கண்டிக்கத் தக்கதாகும். காரியம் மிஞ்சிப் போகுமுன், இனியேனும் அவர்கள் தக்க நடவடிக்கை யெடுத்து, இம்மாதிரி உத்தரவுகளை அமுலுக்குக் கொண்டுவராமல் பார்த்துக்கொள்வார்களென நம்புகின்றோம்.

---

### காரைக்குடி நகரசபை

நகரசபையின் சாதாரணக் கூட்டமொன்று மே 27உ சனிக்கிழமை மாலை 5 மணிக்கு நகரசபை மண்டபத்தில் நடைபெறும்.

### நகரசபைக் கமிஷனர்

காரைக்குடி நகரசபைக் கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் மே 23உ முதல் மூன்று வார ரஜா எடுத்திருக்கிறார். கமிஷனர் சார்ஜை நகரசபைத் தலைவர் ஸ்ரீ ராய. சொக்கலிங்கன் அவர்கள் ஏற்றிருக்கிறார்.

---

### பூலாங்குறிச்சி ஆஸ்பத்திரி திறப்புவிழா

ஸ்ரீமான் வ. சொ. சொக்கலிங்கம் செட்டியார், மீனாட்சி—சொக்கலிங்கம் ஜில்லா போர்டு டிஸ்பென்சரிக்குப் புதிதாக பன்னீராயிரம் ரூபாய் செலவில் கட்டி உதவியிருக்கும் அழகிய கட்டிடம் 9-6-39 வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்கு ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ P. S. குமாரசாமி ராஜா M. L. A, யால் திறந்து வைக்கப் பெறும் என்று அறிவிக்கப்படுகின்றது.

---

### காரைக்குடியில் அரசியல் கைதிகள்தினம்

21—5—39 மாலை 7 மணிக்கு கொப்புடையம்மன் சன்னதிக்கு எதிரில் நகர காங்கிரஸ் கமிட்டியின் சார்பில் உபகாரியதரிசி ஸ்ரீ ராம. கருப்பஞ் செட்டியார் தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீ பி. உண்ணி கிருஷ்ணன் முதலிய பல அன்பர்கள் சொற்பொழிவாற்றினார்கள். பின்னர் கீழ்கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது:- இன்னும் விடுதலை பெறாத அரசியல் கைதிகளை உடனே விடுதலை செய்ய வேண்டுமென்று சர்க்காரை வற்புறுத்திக் கேட்டுக்கொள்ளுகிறது.

### குன்னக்குடியில்

மே 21உ மாலை 7 மணிக்கு ஸ்ரீ வீர. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தலைமையில் அரசியல் கைதிகள் தினம் கொண்டாடப்பட்டது.

---

மே 21உ கண்டரமாணிக்கத்தில் திரு. ராம. கா. வெட்கமணன் செட்டியார் அவர்கள் தலைமையில் அரசியல் கைதிகள் தினம் கொண்டாடப்பட்டது.

## இளையாற்றங்குடி மகா கும்பாபிஷேகம்

(ஒரு நிருபர்)

இளையாற்றங்குடியில் கோவில் கொண்டிருக்கும் ஸ்ரீ நித்ய கல்யாணி ஸமேத ஸ்ரீ கைலாச நாதஸ்வாமிக்கும், விநாயகர், சுப்ரமணியர் முதலிய பரிவார தேவர்களுக்கும் பிரமாதி வைகாசி 14உ ஞாயிற்றுக்கிழமை உதயாதி 2¾ நாழிகை யளவில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் நடைபெறும்.

### நிகழ்ச்சி முறை

வைகாசி 8உ திங்கட்கிழமை உதயாதி நாழிகை 58¾க்கு மேல் 60 நாழிகை அளவில் அனுக்ஞை, விக்னேச்வர பூஜை.

10உ புதன் கிழமை, உதயாதி நாழிகை 3¾க்கு மேல் 7½ நாழிகை யளவில் கடஸ்தாபனம். 11,12,13, வியாழன், வெள்ளி, சனிக்கிழமைகளில் யாக பூஜை.

14உ ஞாயிற்றுக்கிழமை காலை 6 மணிக்கு மேல் 7 மணியளவில் மகா கும்பாபிஷேகம். இரவு பஞ்சமூர்த்திகளும் திருவுலாப் போந்தருளும் காட்சி

### விசேஷ ஏற்பாடுகள்

28-5-49 ஞாயிற்றுக்கிழமை தினம் நடைபெற விருக்கும் இம்மகா கும்பாபிஷேகத்திற்காகக் கூடும் பல்லாயிரக் கணக்கான மக்களின் சௌகர்யத்திற்காக ஏராளமான பொருட்செலவில் விசேஷ ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. எழு பிரிவு நகரத்தார்களும் தங்கள் தங்களுக்கிட்டிருக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டு வேலை செய்ய ஆரம்பித்துவிட்டபடியால் எல்லா வேலைகளும் மிகவும் ஜரூராகவும் முக்கியமாகப் புதுப்பிக்க வேண்டிய கட்டிட வேலைகள் இரவு பகலாகவும் நடந்து வருகின்றன. முக்கியமான ஊரணிகளெல்லாம் சுத்தப்படுத்தப்பட்டு காவல் வைக்கப்பட்டிருக்கின்றன. தெருக்களெல்லாம் சுத்தமாக வைக்கப்பட்டிருப்பதுடன் அவ்வப்போது சேரும் குப்பை கூளங்களை உடனுக்குடன் அப்புறப்படுத்த ஏராளமான தோட்டிகள் நியமிக்கப்பட்டிருக்கின்றார்கள். கோவிலுக்கெதிரில் வடவண்டைபுறம் சுவாமிக்கும் அம்மனுக்கும் யாகசாலையும் தென்புறம் பரிவாரத் தேவதைகள் 17க்கு யாகசாலையும் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கின்றன. இவைகளுக்கு அடுத்தாற் போல் அலங்காரக் கொட்டகைகள் தங்குவதற்கு கட்டப்பட்டிருக்கின்றன. சாப்பாட்டுக்காக அமைத்திருக்கும் கொட்டகைகளில் பந்தி ஒன்றுக்கு சுமார் 1300 நபர்கள் சௌகரியமாக உட்கார்ந்து சாப்பிடலாம். தென்னண்டை ரத வீதியில் அங்காளம்மன் கோவிலுக்குத் தென்னண்டை நகரத்தார்களுக்கு சமையல் சாப்பாட்டுக் கொட்டகைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இங்கேயும் தண்ணீர்பந்தல்களும் சிரமபரிகாரம் செய்துகொள்ள கொட்டகைகளும் கட்டியிருக்கின்றனர். கிங்கிணி கூருடையார் ஊரணி மேலண்டைக் கரையில் தென்னண்டை புறம் பெண்கள் தங்குவதற்கு 3 கொட்டகைகளும் வடவண்டை புறம் பிராமண போஜனக்கொட்டகைகள் 2ம் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிராமண போஜன கொட்டகைகளுக்குப் பின்புறத்தில் வண்டிக்காரர்கள் டிரைவர் முதலியவர்களுக்கு சாப்பாட்டுக் கொட்டகைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. மேலண்டை ரதவீதியிலிருக்கும் பசுமடத்தில் கோயிலூர் மடத்து சாதுக்களுக்கு சாப்பாட்டு கொட்டகைகளும் சிரமபரிகாரம் செய்து கொள்ள கொட்டகைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. பசுமடத்துக் கெதிரில் 10 பேர்கள் ஒரே காலத்தில் நின்று கொண்டு ஸ்நானம் செய்ய குழாய்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இப்பொழுது புதிதாக என்ஜின் பொருத்தி கிணற்று நீரைப் பெரிய தொட்டிகளில் உயர நிரப்பி குழாய்கள் வழியாக ஸ்நானம் செய்ய விடவும், ஸ்நானம் செய்த ஜலம் நந்தவனத்துக்குப் பாயவும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பட்டணச்சாமியார் ஊரணிக்கரையில் உத்தியோகஸ்தர்கள், சாரணர்கள் போலீசார் இவர்களுக்கு சாப்பாட்டுக் கொட்டகையும் தனித்தனியே தங்குவதற்கு ஜாகைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. கோவிலுக்கு வடவண்டை வேதபாராயணக்காரர்களுக்கும் யாகசாலை வைதீகர்களுக்கும் சாப்பாட்டுக்கொட்டகை போடப்பட்டிருக்கின்றது. கும்பகோணம், ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்தின் கிளை ஒன்று இவ்வூரிலிருப்பதில் அங்கேயும் கும்பாபிஷேகம் செய்யப் போவதால் யாகசாலை அமைத்திருக்கிறார்கள். இவைகளைத் தவிர அங்கங்கே ஜனங்கள் தங்குவதற்கு ஏராளமான சிறு சிறுகொட்டகைகளும் காவணங்களும் போடப்பட்டிருக்கின்றன. சுகாதார வசதிக்காக இன்னும் ஏராளமான கக்கூஸ்கள் அங்கங்கே அமைக்கப் போகிறார்கள். வீதியெல்லாம் எலெக்டிரிக் விளக்குகள் பொருத்தி நிலவுபோல் விளங்குகின்றது.

## உள்ளூர் சங்கங்களுக்கு கமிஷனர் அறிக்கை.

பொதுஜன சுகாதார சட்டத்தின் 73-வது பிரிவை, நகர சபைக் கமிஷனர் உள்ளூர் சங்கங்களின் காரியதரிசிகளின் கவனத்துக்குக் கொண்டு வருவதாக ஒரு அறிக்கை அனுப்பியிருக்கிறார். ஷை பிரிவு வருமாறு:—

"தாம் தொத்துநோயால் பீடிக்கப்பட்டிருப்பதாகத் தெரிந்து கொண்ட ஒருவர், எந்த பொது வாசகசாலையிலிருந்தும் புத்தகத்தை வாங்கவோ அல்லது வேறு யார் மூலமேனும் வாங்கிப் படிக்கவோ கூடாது."

இந்தப் பிரிவை சங்க அங்கத்தினர்களுக்குத் தெரிவிப்பதுடன், இதைச் சங்க விதிகளிலும் ஒன்றாகச் சேர்த்துக் கொள்ளவேண்டுமென்று கமிஷனர் கோரியிருக்கிறார். தொத்து நோய்கள் என்ற பிரிவில் அடியிற்கண்ட நோய்கள் சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன:

(1) மூளைக்கொதிப்பு நோய்
(2) நீர்க்கொள்ளுவான்
(3) காலரா
(4) தொண்டை வீக்க நோய்
(5) குஷ்டம்
(6) மணல் வாரி
(7) பிளேக்
(8) நாய்கடி ரோகம்
(9) விஷ சுரம்
(10) பெரியம்மை
(11) 21 நாள் ஜன்னி
(12) தொத்து நோயென்று சர்க்கார் பிரகடனம் செய்யும் வேறு ஏதேனும் நோய்.

மேற்கண்ட விதியை மீறுபவர்கள் 50 ரூ. வரை அபராதம் விதிக்கப்படலாம்.

---

### தேவகோட்டை நகரசபை

தேவகோட்டை நகரசபையில் 8வது வார்டுக்கு காங்கிரஸின் சார்பாக நிறுத்தப்பட்ட ஸ்ரீ பி. ஆதியப்பசேர்வை போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்.

---

### பாகனேரியில் கொள்ளை

சிவகங்கை, மே 19—

சென்ற 14-ந் தேதியன்று பாகனேரி கிராமத்தில் வீடு புகுந்து கொள்ளையிட்டதாகப் போலீசாருக்கு தகவல் அறிவிக்கப்பட்டிருக்கிறது. பிரஸ்தாப தினத்தன்று சீதை ஆச்சி என்ற ஸ்திரி வீட்டில் தூங்கிக்கொண்டிருக்கையில் திருடர்கள் மறு சாவி போட்டுத் தாளைத் திறந்து கொண்டு உட்புகுந்தனர் என்றும் மேற்படி ஸ்திரீயை மண்டையிலடித்து ரூ 700 பெறுமான நகைகளைக் கொள்ளைகொண்டு சென்றனரென்றும் கூறப்படுகிறது.

---

### அடுத்த காங்கிரஸ்

அடுத்த காங்கிரஸ் கிறிஸ்மஸ் வாரத்தில் பீஹாரில் நடைபெறும். சோட்டா நாகபுரி டிவிஷனில் ராம்காரில் இடம் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இயற்கைக் காட்சிகள் மிகுந்த இடம்.



## நல்ல நடை

இளையாற்றக்குடிக் கும்பாபிஷேகம் நடக்கப்போகிறது. பத்திரிகை வெளியாகியிருக்கிறது. கும்பாபிஷேகம் நடக்கும் கோயில் பாண்டித் தமிழ் நாட்டிலிருக்கிறது. அதன் சொந்தக்காரர் யாவரும் தமிழ்மொழிக் குரியவர்கள். கும்பாபிஷேகங் காண வருபவர் யாவரும் தமிழ் மக்களே. இந்த நிலைமையில் பத்திரிகையில் எழுதியிருக்கும் மொழி எது என்பதை அன்பர்கள் அறியுமாறு இங்கே தருகிறேன்.

"அகிலலோக பூஷணமாய், அவித்யா சோஷணமாய், அநாசார பேஷணமாய், அனந்தஸௌக போஷணமாய், அதிபவரோக பீஷணமாய், ஆரணாகம கோஷணாந்தாங்கி, அதுலத்ராவிட பாஷணமோங்கி"

இவ்வளவு படாடோப பயங்கர பாஷையில் இதை எழுதவேண்டுமா? கீழே இளையாற்றங்குடிக் கோவில் நகரத்தார் என்று கையொப்பமிடப்பட்டிருக்கிறது. உண்மையாக உணர்ந்து பார்க்கவேண்டும். இந்தக் கோவில் நகரத்தாரில் எத்தனை பேர் இதன் பொருளை அறிவார்கள்? எழுதினவர் இதன்கீழ் தாம் கையொப்பமிடுவதல்லவென்பதை உணர்ந்திருக்க வேண்டும். தனித் தமிழ்—அழகிய தமிழ் எழுத நகரத்தாருள்—அந்த இளையாத்தக்குடியாருள் பலரிருக்கின்றனர். கவியெழுதும் புலவரும் பலருண்டென்பதை உலகறியும். இந்த நிலைமையில் கும்பாபிஷேகப் பத்திரிகையைத் தயார் செய்தவர்களும் அதை நகரத்தார் பெயரால் எழுத முற்பட்ட மனிதரும் தங்கள் செய்கையைச் சரியாகச் செய்யத் தவறிவிட்டனர். மற்றவர்களும் கும்பாபிஷேக காரியங்களை எப்படி நடத்துகிறார்களென்பது பின்னர் பார்த்தால் தான் தெரியும். ரூ 75,000 செலவாகுமென்று தெரிகிறது. கோவிலுக்கு 75 ஆயிரம் என்றால் இதை யொட்டி நகரத்தாருக்குப் பொதுவாக எழு லட்சம் ரூபா செலவாகக் கூடுமென்று மதிப்பிடப்படுகிறது. நல்லது தான்.

—ஒரு தனவணிகன்.

---

### இண்டர்மீடியட் பரீக்ஷை முடிவு

திருச்சி செண்ட் ஜோசப் காலேஜிலிருந்து இண்டர்மீடியட் பரீக்ஷைக்குச் சென்ற பள்ளத்தூர்(4615)மு. அ. அரு. அருணசலம் தேர்ச்சி பெற்றார். காசி ஹிந்து யுனிவர்ஸிட்டியிலாவது சென்னை இஞ்சினீரிங் காலேஜிலாவது சேர்ந்து படிப்பாரென்று தெரிகிறது.

---

### ஸ்ரீ ஈ. வே. ரா. விடுதலை.

ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சி சம்பந்தமாகத் தண்டிக்கப்பட்டு சிறைவாசம் செய்துவந்த ஸ்ரீ ஈ. வெ. ரா. மே 22உ கோவை ஜெயிலிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். தேக அசௌக்கியம் காரணமாகவே விடுதலை செய்யப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

---

### மந்திரியின் மகன் கைது.

எல்லைப்புற மாகாணப் பிரதம மந்திரி டாக்டர் கான் சாகிபின் புத்திரன் ஜனுப் உபயதுல்லா, சில விவசாயிகள் விஷயத்தில் பிறப்பிக்கப்பட்ட உத்தரவை நிறைவேற்ற முடியாதபடி தடுத்துவந்ததாயும், சட்டத்தை மீறும்படி செஞ்சட்டைப் படையினரைத் தூண்டியதாயும் தெரிந்து, பிரதம மந்திரியே தம் மகன்மீது நடவடிக்கை யெடுக்கப் போலீஸாருக்கு உத்தரவிட்டார். அதன்மேல், போலீஸார் ஜனுப் உபயதுல்லாவைக் கைது செய்தனர். அன்று மாலை நடந்த பொதுக் கூட்டத்தில் பிரதம மந்திரி பேசும்போது "காங்கிரஸ் கவர்ன்மெண்டு சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டது. அது சொந்த விஷயத்தில் ஒரு விதமாகவும், பிறர் விஷயத்தில் வேறு விதமாகவும் நடக்காது; என் பிள்ளையென்றால் விதிவிலக்காகுமோ! அவனுக்காகமட்டும் பரிந்திருந்தால் அதைவிட வேறு அநீதி பிராது" என்று கூறினர்.

## நாயர்—பிராமணர் கலப்பு மணம்

ஒரு நாயர் பிராமண விதவையைக் கல்யாணம் செய்வதால் அவர் சாதியை யிழந்துவிடுவாரா? அவ்வாறு சாதியை யிழந்துவிட்டதாகக் கூறி, அவரது குடும்ப விசேஷங்களில் கிரியை நடத்த அவர் குடும்ப புரோகிதர் மறுத்தால், கோர்ட்டில் வழக்குத் தொடரலாமா?—இந்தப் பிரச்னைகள் சமீபத்தில் திருப்பூணித் துறை பரமேசுரமேனன் என்பவரால் அவரது குடும்பப் புரோகிதர்மீது தொடரப்படும் வழக்கில் தீர்ப்பளிக்க வேண்டியவைகளாகும். திரு. மேனன் சமீபத்தில் அன்னபூரணி அம்மாள் என்ற பிராமண விதவையை மணந்து கொண்டார்.

---

### ஜீவகாருண்யம் வேண்டாமா?

காரைக்குடி ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் அடியில் வருமாறு எழுதுகிறார்:—

உலகம் போற்றும் உயரிய தலைவர்களுள் ஒருவரான நம் மகாத்மா காந்தியடிகள் தனது வாழ்க்கை முழுவதையும் அஹிம்ஸா தர்மத்திற்காக அர்ப்பணம் செய்து பெரும்பாடு பட்டு வருகிறார் என்பதை நான் இங்கு அதிகமாக ஒன்றும் எழுதவேண்டியதில்லை. மனிதர்கள் தான் ஆடு, கோழி முதலிய வர்க்கங்களைப் புசிக்கின்றார்களென்றால் சாமி என்று சொல்லக்கூடிய ஒன்றுக்குமா அநியாயமாக ஆடு, கோழிகளைப் பலியிடவேண்டும்? இது கிராமாந்திரங்களில்தான் மிகுதியாக நடக்கின்றன என்று சொல்லிவிட முடியாது. நகரங்கள் பல அதிக சீர்திருத்தமாக இருந்தாலும் அங்குள்ள மக்களும் மேற்கண்ட காரியத்தில் தங்கள் பராக்கிரமத்தைக் காட்டிவிடுகின்றனர். சமீபத்தில் பாருங்கள் காரைக்குடிக் கொப்புடையம்மன் கோவில் உற்சவம் நடந்தது. அதில் ஒரு நாள் தவறாது ஆடுகள் அநீதியாகப் பலி இடப்பட்டன. கொப்புடையம்மன் தான் தனக்கு ஆடு பலியிட வேண்டுமென்று சொன்னாலும், அடுத்தாற்போல் நடக்கும் முத்தாளம்மன் பொங்கலிலுமா இந்த வேட்டை நடக்க வேண்டும்! முத்தாளம்மனும் தனக்கு ஆடுகளைப் பலியிடாவிட்டால் சரியாக வராது என்று சொன்னது போலும்! அட பாவமே, கடவுள் கடவுள் என்ற பெயரைச் சொல்லிக்கொண்டு ஜீவன்களைக் கொல்லலாமா? ஆட்டின்மேல் தண்ணீரை ஊற்றினால் அது தண்ணீரின் குளிரினால் தன் உடலைச் சிலுப்பாதா? இந்த சிலுப்பு ஆனவுடன் கடவுள் உத்தரவு கொடுத்து விட்டது என்று உயிரைக்கொல்லலாமா? அஹிம்சையே உருவாய்க்கொண்ட காங்கிரஸ் அங்கத்தினர்கள் நிறைந்துள்ள நகரசபையார் இருக்குமிடத்தில் இம்மாதிரி உயிர்க் கொலைகள் நடக்கலாமா?

---

### ஆடு திருட்டு

(நமது நிருபர்)

காரைக்குடி சந்தையில் நான்கு செம்மறியாடுகளைத் திருடிக்கொண்டு தேவகோட்டையில் கொண்டு வந்து குறைந்த விலைக்கு விற்கப் பேசிக்கொண்டிருக்கும் பொழுது திண்டுக்கல் ருத்ரநாயக்கனையும், திருமால் நாயக்கனையும் தேவகோட்டைப் போலீசார் 22—5—39 இரவு 9 மணிக்கு சந்தேகத்தின் மேல் அரஸ்டு செய்து கேஸ் ரிஜிஸ்டர் செய்துகொண்டு புலன் விசாரித்து வருகின்றனர்.

---

### திருட்டுச் சொத்து வாங்கினதாக

(நமது நிருபர்)

ஒரு குறவனிடமிருந்து மூன்று பவுன் பெறுமானமுள்ள தங்கத்தாலி ஒன்றை ரூ. 50 க்கு வாங்கியதாக கூடலூர் கற்பூரம் செட்டியார் மீது ராஜசிங்கமங்கலம் போலீசார் திருவாடானை சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தொடர்ந்திருந்த வழக்கில் சரியானபடி ருசு இல்லாததால் ஷை கேசில் குற்றவாளி விடுதலை செய்யப்பட்டார்.

## ராஜ்கோட் தீர்ப்பு

### மகாத்மா தியாகம்

ராஜ்கோட் சீர்திருத்தங்கள் விஷயத்தில் இந்தியாவின் பிரதம நீதிபதி ஸர் க்வயர் அளித்த தீர்ப்பை மகாத்மா காந்தி முற்றிலும் துறந்து விட்டார். இதுபற்றி அவர் மே 17-ந் தேதி வெளியிட்ட அறிக்கையில், என்னுடைய சகாக்களுடன் விஸ்தாரமாக விவாதித்த பிறகு இந்தியப் பிரதம நீதிபதியின்தீர்ப்பை முற்றிலும்துறந்துவிட முடிவு செய்தேன்" என்று அவர் குறிப்பிட்டிருக்கிறார். மேலும், சர்வாதிகார பீடத்தின் தலையீட்டைக் கோரித் தாம் உபவாச மனுஷ்டித்ததில், பலாத்காரம் கலந்திருந்த தென்றும், தாகூர் சாகிபைப் பொறுத்துமாத்திரமே உபவாசம் அனுஷ்டிக்கப்பட்டிருக்க வேண்டுமென்றும், தமது அறிக்கையில் கண்டிருக்கிறார். ஸர் க்வயர் தீர்ப்பின் நிர்ப்பந்தம் ஒழிந்து விட்டதால் இனி முஸ்லிம்களும், பாயாத்துகளும் தாகூர் சாகிபு மனமுவந்து கொடுப்பதைத் தாராளமாக ஏற்கலாமென்று கூறி, ராஜ்கோட் மக்களின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்து வைக்கும்படி தாகூர் சாகிபையும், தர்பார் வீரவாலாவையும் மகாத்மா தமது அறிக்கை மூலம் கேட்டிருக்கிறார்.

தமது தவறை ஒப்புக்கொண்டு மகாத்மா வெளிட்ட அறிக்கையைப் பாராட்டி தாகூர் சாகிபு ஒரு அறிக்கை வெளியிட்டிருக்கிறார்.

### சீர்திருத்தக் கமிட்டி நியமனம்

தாகூர் சாகிபு வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், 10 மெம்பர்கள் அடங்கிய அரசியல் சீர்திருத்தக் கமிட்டியை நியமித்திருப்பதாயும், இக்கமிட்டியார் ஒரு மாதத்திற்குள் ராஜ்கோட்டிற்கு வழங்க வேண்டிய சீர்திருத்தத் திட்டத்தைத் தயாரித்து விடவேண்டுமென்று உத்தரவிட்டிருப்பதாயும் குறிப்பிட்டிருக்கிறார். இக்கமிட்டிக்கு தர்பார் வீரவாலா தலைவர். மே 20உ இரவு நடைபெற்ற தர்பாரில் இவ்வறிக்கை வெளியிடப் பட்டது. இந்த தர்பாருக்கு மகாத்மா காந்தியும் தமது மனைவியாருடனும், காரியதரிசியுடனும் விஜயஞ் செய்தார். தாகூர் சாகிபு அவர்களை வரவேற்றுபசரித்தார். ஒரு மோட்டாரில் மகாத்மாவும் தாகூர் சாகிபும் அமர்ந்து பவனி சென்றனர்.

தாகூர் சாகிபின் உத்தரவுப்படி அடக்குமுறை உத்தரவுகளெல்லாம் ரத்து செய்யப்பட்டன. அபராதத் தொகைகளாக வசூலிக்கப்பட்டவை யெல்லாம் வாபீஸ் செய்யப்படும்.

---

### வியாபாரிகள் ஒத்துழையாமை?

பெல்லாரியில் நடைபெற்ற வியாபாரிகள் சங்கத்தில், காங்கிரசோடு ஒத்துழைக்கக்கூடாதென்றும், சங்கத்தின் அங்கத்தினர்கள் காங்கிரஸிலிருந்து ராஜினமாச் செய்யவேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது.

---

### பலாத்காரம் செய்ததாக

(நமது நிருபர்)

முத்துராமலிங்க பட்டணத்திற்கும் புதுப்பட்டணத்திற்கும் மத்தியில் சென்று கொண்டிருந்த 20 வயதுள்ள கிறிஸ்தவ கன்னிகையை பலாத்காரம் செய்ததாகப் புதுப்பட்டணம் மா. லெப்பை என்பவன்மீது போலீசார் திருவாடானை சப் மாஜிஸ்திரேட் கோர்ட்டில் தொடர்ந்திருந்த வழக்கில் 20-5-39 ல் சரியான ருசு இல்லாததால் எதிரி குற்றவாளியல்லவென்று தீர்ப்பளிக்கப்பட்டது. பெண்ணின் நெஞ்சு முதுகு மேலெல்லாம் பலத்த காயங்கள் இருந்ததென்று டாக்டரால் சர்டிபிகேட்டு கொடுக்கப்பட்டிருந்தது.

---

### ஓம் மண்டலி மூடப்பட்டது

ஓம் மண்டலி சம்பந்தமாக விசாரிக்க நியமிக்கப்பட்ட கமிட்டியின் சிபார்சுகளைச் சிந்து கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டு ஓம் மண்டலியையும், ஓம் நிவாஸையும் சட்ட விரோதமான ஸ்தாபனங்களென்று தடுத்துவிட்டனர். இதன் மேல் ஓம் மண்டலி மூடப்பட்டது. அங்கிருந்தோர் அவரவர் வீடுகளுக்குச் சென்று விட்டனர்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரெங்கூன், மே 24உ

| | |
|---|---|
| ரயில் நெல் | 95/96 |
| படகு ,, | 97/98 |
| சுகந்தி அரிசி வெள்ளை | 250/255 |
| யாதலை | 240/245 |
| புழுங்கல் | 257/260 |
| ஹென்ஸடா மில்சார் | 252-8/255 |
| மாந்தலே மில்சார் | 242-8/250 |

### லண்டன் ரப்பர்

லண்டன் மே 22உ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு 8 பென்ஸ்

---

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், மே 22உ

ரப்பர் பீக்கல் ஒன்றுக்கு 37 வெள்ளி 18 காசு

---

### கொழும்பு ரப்பர்

கொழும்பு மே 22உ

| | | |
|---|---|---|
| ஷீரேப் ரப்பர் | 45 | சதம் |
| ஷை ஷீட் | 41 | ,, |
| ரப்பர் கூப்பன் | 33 | ,, |
| டீ கூப்பன் | 43 | ,, |

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, மே 23உ

| | | | |
|---|---|---|---|
| சவரன் விலை (மொத்த விலை) | 23 | 11 | 9 |
| சவரன் (சில்லரையில்) | 23 | 12 | 3 |
| தங்கம் ரெடி | 37 | 0 | 3 |
| ஷை வாயிதா | 37 | 2 | 3 |
| மூசை | 36 | 9 | 3 |
| வெள்ளி வாய்தா | 52 | 15 | 0 |
| வெள்ளி ரெடி | 54 | 0 | 0 |
| வெள்ளி (சில்லரையில்) ரூபாய் எடை | 0 | 9 | 0 |

---

### லண்டன் ரப்பர் ஸ்டாக்

லண்டன், மே 22உ

| | |
|---|---|
| லண்டன் ஸ்டாக் | 43,040 டன் |
| முந்தின வாரம் | 43,477 ,, |
| 20உயோடு முடிவான வாரம் டெலிவரி | 1,274 ,, |
| முந்தின வாரம் | 1,672 ,, |
| லிவர்ப்பூல் ஸ்டாக் | 21,893 ,, |
| ஷை முந்தின வாரம் | 22,500 ,, |
| டெலிவரி | 675 ,, |
| முந்தின வாரம் | 737 ,, |

---

### ரப்பர் கோட்டா

1939ம் வருஷத்தின் மூன்றாவது கால் வருஷத்திற்கு ரப்பர் கோட்டாவை 55 சதமானமாக, சர்வதேச ரப்பர் ரெகுலேஷன் கமிட்டி நிர்ணயித்திருக்கிறது. இது தற்பொழுதிருக்கும் கோட்டாவைவிட 5 சதமானம் அதிகம். கமிட்டியின் அடுத்த கூட்டம் ஜூலை 25உ கூடும்.

---

### பம்பாய்-சென்னை விமானப் பிரயாணம்

பம்பாய்—ஹைதராபாத்—சென்னை—கொழும்பு ஆகாய விமான யாத்திரையைத் துரிதப்படுத்த டாடாக் கம்பெனியார் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். வேகமாகச் செல்லக் கூடிய மூன்று புதிய விமானங்களுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறார்கள். இனி பம்பாயிலிருந்து சென்னைக்கு 5 மணி நேரத்திலும், சென்னையிலிருந்து கொழும்புக்கு 2 மணி 40 நிமிஷத்திலும் விமானம் போய்ச்சேரும். ஒவ்வொரு விமானத்திலும் தபால்களுடன் ஆறு பிரயாணிகளுக்கு இடமிருக்கும்.

## தேவகோட்டை

### வர்த்தக சங்க ஆண்டு விழா

(நமது நிருபர்)

தேவகோட்டை வர்த்தக சங்கத்தின் இரண்டாவது ஆண்டுவிழா 21-5-39 மாலை 4-30 மணிக்கு இவ்வூர் முனிசிபல் ஹையர் எலிமெண்டரி பாடசாலைக் கட்டிடத்தில் காரைக்குடி நகரசபைக் கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் தலைமையில் நடைபெற்றது. சங்கத் தலைவர் வரவேற்புப் பத்திரம் வாசித்தளித்தார். அட்வகேட் ஸ்ரீ ராஜகோபாலய்யர் "பொதுஜன சேவை" என்பதுபற்றியும், ஸ்ரீ திருநாவுக்கரசு ஆச்சாரியார் "ஒற்றுமை" என்பதுபற்றியும் உபன்யாசம் செய்தார்கள். பிறகு 5-45 மணிக்கு தலைவர் ஸ்ரீ புருஷோத்தம், கமிட்டி மெம்பர்கள் ஆகியோரைப் புகைப்படம் எடுத்தனர். தலைவர் முடிவுரையில் வர்த்தகர் விடுதியும் அமைக்கப்பட வேண்டுமென்றும், வர்த்தகர் குழாய்களே நாட்டில் செல்வாக்கும்நாகரீகமுமுடையவர்களென்றும், அநீதா டமையாமல் கடமை யறிந்தவர்களாக இருக்கவேண்டு மென்றும், வர்த்தக சங்கத்தாருக்கும் நகர சபையினருக்கும் எவ்வித மனஸ்தாபமும் இருக்கலாகாது என்றும், நகரசபையாரின் சட்ட திட்டங்களுக்கு உள்பட்டிருக்கவேண்டு மென்றும், நகர சபையார் பொது ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுஜன ஊழியர்களென்றும், ஒரு நாட்டின் சுபிக்ஷம் வியாபாரிகளால்தான் ஏற்படவேண்டுமென்றும், பதவிகளுக்கு போட்டியிட்டுக் கொள்ளாது நல்ல ஊக்கமும் ஆர்வமும் உள்ளவர்களைக் கொண்டு சங்கத்தை அபிவிருத்தி செய்ய வேண்டு மென்றும் கூறினார். இந் நகர் நகரசபை அங்கத்தினர் ஜனாப் எஸ். மீரு முகையதீன் ராகிப் பகதூர் வந்தனோபசாரம் கூறக் கூட்டம் இனிது நிறைவெய்தது.

M. S. B. S. சபையாரின் 'கிருஷ்ண லீலா'வில் கம்சன்


## தேவை.

எல்லாவித கட்டிட சாமான்களுக்கும், ஆடர்கள் சேகரிக்க, ஊக்கமும் அநுபவமுமுள்ள கான்வாசர்கள் தேவை. வேண்டுவோர் அவரவர்களுடைய முந்திய அநுபவத்தையும், எதிர்பார்க்கும் சம்பளத்தையும் குறிப்பிட்டு கீழ்க்கண்டவர்க்கு விண்ணப்பித்துக் கொள்ளவும்.

மானேஜிங் டயரக்டர்,

மதுரஸ் ஜெனரல் கன்ஸர்ன் லிமிடெட், காரைக்குடி.



குணத்தில்மேலானது

எல் ஜீ

L.G

மிஸ்கீ.பெருங்காயம்

லால்ஜீகோது & கோ.

சௌவுக்கார்பேட்டை.மதராஸ்.



## முக்கிய அறிவிப்பு

காரைக்குடி முனிசிபல் கமிஷனர்,

ஸ்ரீ T. புருஷோத்தம் அவர்கள் எழுதுகிறார்:—

திருவண்ணாமலை சித்த ஔஷத ஆஸ்ரமம் டாக்டர் S. பரசுராமய்யர் அவர்கள் எனக்கு சில முக்கிய மருந்துகள் கொடுத்திருக்கிறார். அவைகளில் சித்த எண்ணை, மேகாந்தகா ரசாயன லேகியம் இவைகளின் உயர்தர குணங்களை நான் உபயோகித்துப் பரீக்ஷித்துப் பார்த்திருக்கிறேன். அவரிடம் நீரழிவு ரோகத்திற்கும் க்ஷயரோகத்திற்கும் குறிப்பிட்ட உயர்தர மருந்துகள் இருக்கின்றன. மதராஸ் செட்டிநாடு மற்ற இடங்களிலும் இவரிடம் மருந்து சாப்பிட்டுக்கொண்டு வருகிற அநேக செல்வாக்காளர்கள் உண்டு. ஆனதால் இவ்வூரில் நீண்டகாலம் தங்கமுடியாது. சொற்பகாலந்தான் தங்கமுடியும். காரைக்குடியில் ஷையாரின் சிகிச்சை சாலை ஒன்று ஏற்படுத்துவது உசிதமென ஷையாரிடம் குறிப்பிட்டிருக்கிறேன்.

ஷை சிகிச்சை சாலை ஏற்படுத்தும்வரை ஒவ்வொரு மாதக் கடைசி வாரத்திலும் இவ்வூர் ஏ. வி. அன் சன்ஸ் கட்டிடத்தில் தங்குவதாக ஒப்புக்கொண்டிருக்கிறார். அந்த சமயத்தில் எல்லாரும் ஷையாரிடம் தங்கள் தங்கள் வியாதிகளைப்பற்றிச் சொல்லித் தெரிந்து கொள்ளலாம்.

ஷை செட்டிநாடு பொது ஜனங்கள் இத்தருணத்தை விட்டுவிடாது ஏற்றுக் கொண்டு முக்கியமாய் மூலம், க்ஷயம், நீரழிவு சர்மவியாதிகளின் கஷ்டங்களிலிருந்து நிவர்த்திக்கப்பட்டு நன்மையடைவார்களென நம்புகிறேன். ஷையாரின் க்ஷேமத்தையும் முன்னேற்றத்தையும் விருத்தியடையும் பொருட்டு வேண்டுகிறேன்.

ஷையாரின் ஸ்திர விலாசம்:- பரசுராம சித்த ஔஷத ஆஸ்ரமம், திருவண்ணாமலை.


## யூனிட்டுக்கு ஒரு அணா

கைத்தொழில் விஷயங்களுக்கு உபயோகிக்கப்படும் மின்சாரத்துக்குரிய கட்டணத்தை திருவிதாங்கூர் கவர்ன்மெண்டார் வெகுவாகக் குறைத்துவிட்டார்கள். மாதம் 250 யூனிட் வரை யூனிட் ஒன்றுக்கு 2 அணா; 500 யூனிட் வரை $1\frac{1}{2}$ அணா; 1000 வரை 1 அணா.

## சட்டசபையில் ஸ்திரீ அங்கத்தினர்

திருவிதாங்கூர் சட்டசபைக்கு முதன் முதலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்திரீ அங்கத்தினர் மிஸ் தெரீஸியா கோரா என்பவர். ஸ்ரீசித்திரா ஸ்டேட் கவுன்ஸிலுக்கு இவர் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். இதற்கு முன்னர் பல பெண்மணிகள் திருவிதாங்கூர் சட்டசபையில் அங்கம் பெற்றிருந்தும் அவர்கள் கவர்ன்மெண்டால் நியமிக்கப்பட்ட மெம்பர்கள் தான்.

## தாகூர் வாசகசாலை, காரைக்குடி

சுபாஷ் சொற்பொழிவுப் பயிற்சிக் கழகத்தில் ஸ்ரீ ஆர். ராமச்சந்திரன் தலைமையில் பயிற்சிக் கூட்டம் மே 21௳ நடைபெற்றது. 'அரசியல்' என்னும் பொருள் பற்றி ஸ்ரீ லெ. சண்முகம் பேசினதும் தொடர்ந்து ஸ்ரீமான்களான, வெ. சுவாமிநாதன், பழ. சுப்பிரமணியன், ம. நாராயணன், நா. பாலசுப்பிரமணியன், கே.எஸ். ஆத்மாராம், நா. கிருஷ்ணன், வா. நடேசய்யர் முதலியோரும் பேசினார்கள்.

## முனிசிபல்ஊழியர்கள் கூட்டுறவுசங்கம்

காரைக்குடி முனிசிபல் ஊழியர்களின் கூட்டுறவு சங்கமொன்று மே 16௳ கமிஷனர் ஸ்ரீ டி. புருஷோத்தம் அவர்கள் தலைமையில் அமைக்கப்பட்டிருக்கிறது. கூட்டுறவு சங்கங்களின் சீனியர் இன்ஸ்பெக்டர் ஸ்ரீ கைலாசம் ஐயரும், ஸ்பெஷல் ஆபீஸர் ஸ்ரீ வெங்கட்ராம சாஸ்திரியாரும் விஜயஞ் செய்திருந்தனர்.


### சாய்ச்சலினால் தொழில் கெடும் போலிருந்தது

"ஒரு கண்டிராக்டைப் பெறுவதற்கு மூன்று மாதந்தான் இருந்தது. ஆனால் என்னைக் காய்ச்சல் விரட்டிற்று. கொஞ்சம் கொஞ்சமாய் சவுக்கியமானாலும், மீண்டுந் தொழில் செய்ய முடியுமோ என்று ஏங்கினேன். சாப்பாடு செல்லாமல் வாந்தி எடுத்தேன். என் கனம் குறைந்தது. அது சமயம் டாக்டர் "ஹார்லிக்ஸை" சாப்பிடச் சொன்னார். அற்புதமான மாறுதல் ஏற்பட்டது. சிறிது சிறிதாக பலம் அடையலானேன். எனது தவணை முடிவதற்கு இரண்டு நாள் முன்னதாகவே கண்டிராக்டில் கையெழுத்திட்டேன். எனது தொழில் பிழைத்தது. ஹார்லிக்ஸுக்கு எனது வந்தனம்."

(ஒப்பம்) ஒய். வி. ராவ், வியாபாரி, பந்தரா.

ஹார்லிக்ஸை இன்றே வாங்குங்கள். எங்கும் கிடைக்கும்.



ஏராளமான மக்கள் இடமின்றி வீடு திரும்புகிறார்கள்!

முன்னிடம் தேடுங்கள்!!

காரைக்குடி ஸ்ரீ கிருஷ்ணாவில்

S. D. சுப்புலக்ஷிமி, பேபி சரோஜா நடித்த

தியாகபூமி தமிழ்ப் படம்

27—5—39 சனிக்கிழமை முதல் இரண்டாவது வாரம்




## பாரதமாதா ட்ரூப், பலவான்குடி

நெய்வாசல் உலக நாயகி அம்மன் கோவில் அருகாமையிலுள்ள ஊருணிக் கரையில் இவ்வூர் பாரதமாதா ட்ரூப்பினரால் மே 12௳யிலிருந்து 15ந்தேதிவரை அமராவதிபுதூர் மகாத்மா ட்ரூப் ஸ்கௌட் மாஸ்டர் ஆத. சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் தேகப்பயிற்சி, டார்ச் மார்ச், மார்ச்சிங், முடிச்சுகள், பாண்டேசுகள், சமையல் ஆகியவைகளும் இரவில் தீவட்டமும் நடத்தப்பட்டன. 15௳ மாலை 6 மணிக்கு கரகோஷத்தினிடையே முகாம் கலைந்தது.

## சண்முகநாதபுரம் டோர்ணமெண்டு முடிவு

ஜவஹர் வாசகசாலையின் பாட்மிண்டன் டோர்ணமெண்டு முடிவு (Final) ஆட்டம் சென்ற சித்திரை மீ 30௳ காலை 3 மணிக்கு நடைபெற்றது. மூன்று கேம்கள் ஆடியதின் பேரில் வின்னர்களாக காரைக்குடி ஜெயபால் சிங் R. வேணுகோபால் (L. H.) அவர்களும் ரன்னர்களாக டாக்டர் ஜேம்ஸ் AR. சோமய்யா அவர்களும் வெற்றி பெற்றார்கள். காரைக்குடி முனிசிபல் கமிஷனர் ஸ்ரீ T. புருஷோத்தம் அவர்கள் தலைமை வகித்துப் பரிசுகள் வழங்கினார்கள். அபிஷேனியா பழ. நாச்சியப்பா அவர்கள் ஓர் அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள்.

## காரம்போர்டு டூர்ணமெண்டு

காரைக்குடி நகரத் திரிசாரணர்படையின் சார்பில் காரம்போர்டு பாய்ஸ் டூர்ணமெண்ட் 17—5—39ல் ஆரம்பமாகி 21—5—39-ல் திரு முத்து. நாராயணன் அவர்கள் தலைமையில் பைனல் நடைபெற்றது. அதில் அழகப்பா அன் பார்ட்னரும் ஹோம் டீமும் கலந்துகொண்டனர். அழகப்பா அன் பார்ட்னர் வெற்றி பெற்றனர். வெற்றியாளர் எஸ். அழகப்பன் எஸ். பழநியப்பன், இருவருக்கும் பெரிய வெள்ளிப் பதக்கமும் தோல்வியாளர் என். பழநியப்பன், ஆர். எம். அழகப்பன் இருவருக்கும் சிறிய வெள்ளி பதக்கமும் தலைவரவர்களால் பரிசளிக்கப்பட்டன. திரு. ராம. சொக்கலிங்கம் அவர்களால் வந்தனம் கூறப்பெற்று கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## உலகன்பட்டி

இவ்வூர் ஸ்ரீ உலகநாயகி பாட்மிண்டன் கிளப்பின் சார்பாக இருவர் பந்தாடும் விளையாட்டு வைகாசி-மீ 21௳ ஆரம்பிக்கப்பெறும். இராமநாதபுரம் ஜில்லா புதுக்கோட்டை ஸ்டேட்டிலுள்ள சகல வகுப்பினரும் மேற்படி விளையாட்டில் சேர்ந்து கொள்ளலாம். விரும்புவோர் பிரவேசக் கட்டணம் ரூபாய் ஒன்றுடன் விளையாட்டாளர்களின் மூவர் பெயரும் ஊரும் முழு விலாசத்துடன் குறித்துக் காரியதரிசிக்கு அனுப்பவேண்டும். வைகாசி மீ 11௳ மாலை 4 மணிக்கு ஸ்ரீ ஞான சம்பந்த வாசகசாலையில் வந்திருப்பவர்கள் முன்பாக பாலெட் குலுக்கப்படும். முடிவாக ஜெயிப்பவர்களுக்குப் பெரிய வெள்ளிக் கப்புகளும், தோற்பவர்களுக்கு சிறிய வெள்ளிக் கப்புகளும் பரிசளிக்கப்பெறும் என்று காரியதரிசி அறிவிக்கிறார்.


### ஓர் சாதுவின் வப்பிரசாதம்

கன்ஸம்ஷன் என்று ஆங்கிலத்திலும் க்ஷயரோகமென ஆயுள் வேதத்திலும் சொல்லப்படும் ராஜரோகத்தை, வெகு சுலபமாக ஸ்வஸ்தப் படுத்தப்படும். இந்த ரோகத்தைக் குணப்படுத்த முடியுமா என்ற சந்தேகம் அனேகர்களுக் குண்டு. சிறிதும் கவலை வேண்டாம். மருந்தின் பலனை பரீக்ஷித்துத் தெரிந்து கொள்வதற்கு 10 தினம் மருந்து ரூ 10—பூரணமாகக் குணப்படுத்திக் கொள்ள கடிதம் எழுதுங்கள்.

தேவையானால் வெளியூர் வியாதியஸ்தர்களையும் அவரவர்கள் ஊருக்குவந்து பரீக்ஷிக்கலாம். விவரத்திற்கு எழுதவும்.

டாக்டர் த. ராமநாதன், M. D. (Siddha), கணேஸ்ஜி கிளினிக் 304 வால்டாக்ஸ் ரோட், மதராஸ்.


# உள் நாட்டுச் செய்திகள்

## சிவகெங்கையில் பொதுக்கூட்டம்

19—5—39 மாலை 7 மணிக்கு இவ்வூர் அரண்மனை வாசல் முன்பாக நாஞ்சி நாடு சாமி கிருஷ்ணனந்தா அவர்கள் தலைமையின்கீழ் ஸ்ரீ வேலூர் எஸ். கே. ஷர்புதீன் சாயபு அவர்கள் மாகாண அரசியல் விஷயமாய் விரிவாகப் பேசி கட்டாய ஹிந்தியை எதிர்த்தும் வியாபார வரியை எதிர்த்தும் சொற்பொழிவாற்றினார்கள். கூட்டம் இரவு 11 மணிக்கு முடிவடைந்தது.

## சிவகெங்கையில் காங்கிரஸ் பொதுக்கூட்டம்

மே 14௳ மாலை 7 மணிக்கு சிவகெங்கை அரண்மனை வாசல் முன்பாக ஸ்ரீமான் S. M. நாராயண அய்யங்காரவர்கள் தலைமையில் ஓர் காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஸ்ரீமான் கா. வெ. சேதுராமச்சந்திரன் காங்கிரஸும்—முஸ்லீம் லீக்கும் என்பதுபற்றிப் பேசியபின், மதுரை தேசபக்தர் ஸ்ரீமான் தியாகராஜ சிவம் அவர்கள் காங்கிரஸும் நமது கடமையும் என்பதுபற்றி மிக உருக்கமாகவும், விளக்கமாவும் சுமார் 1-30 மணி நேரம் பேசினார்கள்.

## சிவகெங்கை முஸ்லீம் வாலிபர் சங்கம்

மேற்படி சங்க மாதந்தக் கூட்டம் ஜனாப் முகம்மது மாதார் தலைமையில் நடைபெற்றது. கலாசாலைப் படிப்புள்ள முஸ்லீம் மாணவர்களுக்குப் பிரசங்கப் பயிற்சி செய்து வர ஜனாப் ஷேக் தாவுது அவர்களை நியமிக்கப்பட்டது. முஸ்லீம் ஸ்திரீகளுக்குக் கல்வி குடும்ப சம்ரக்ஷணை சுகாதாரம் வைத்தியம் முதலியவைகளைப் பிரசாரம் செய்வதற்கான முறைகள் வகுக்கப்பட்டன.

## கௌரோஜி படை கல்லுப்பட்டி

மே 20௳ மாலை 4 மணிக்கு சாரணர்கள் ஊர்வலமாக வந்து அ. புதூர் மகாத்மா ட்ரூப் மாஸ்டர் எ. டி. சுப்பிரமணியம் அவர்களால் சாரணக்கொடியேற்றுவிக்கப்பட்டது. சாரணர்களின் கடமை என்பது பற்றி மாஸ்டர் லாசர் அவர்களும் சாரணர்கள் முன்னேற்றம் என்பது பற்றி ட்ரூப் லீடர் V. R. பொன்னையா அவர்களும் பேசினார்கள். சாரணர்களால் பெருமாள் கோவில் முன்னிலையிலுள்ள மைதானத்தில் காம்ப்பயர் நடத்திக்காட்டப்பட்டது. புது வருடத்திற்கு ஸ்ரீமான்கள் D. காஸ்பர் மாஸ்டராகவும், D. வில்லியம் லாசர் தேவராஸ் உதவி மாஸ்டராகவும், V.R. பொன்னையா ட்ரூப் லீடராகவும், S. மெய்யப்பன் காரியதரிசியாகவும், A. சுவைக்கீன், A. வள்ளியப்பன், சோம. ஏகப்பன், S. மெய்யப்பன் இவர்கள் அணித் தலைவர்களாவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

## போஸ் சிறுவர் சங்கம் கோத்தமங்கலம்

இச்சங்கத்தின் முதலாவது ஆண்டு நிறைவு விழா இளைஞர் பொதுநலக் கழகத் தலைவர் திரு. க. தி. அருணசலம் அவர்கள் தலைமையில் கொண்டாடப்பட்டது. அவ்வமயம் செல்வ விநாயகர் கல்விச்சாலை உதவி ஆசிரியர் திரு. ஆரோக்கியசாமிபிள்ளை கிராமச் சீர்திருத்தம் என்பதுபற்றியும் கே. இராமசாமி தமிழ் கல்வி என்பதுபற்றியும் பேசினார்கள்.


## லைப் அஷ்யூரன்ஸ்

ஒன்றே ஒருவன் காலக்கிரமத்தில் சுலபமாக சிறுசிறு தொகைகளாக செலுத்தி நிச்சயமாய்த் தன் வயோதிக காலத்தில் தன்னுடைய அல்லது தனக்குப் பின் தன்னை நம்பியிருப்போர்களுடைய

பொருளாதார சுதந்திரத்தைத் தேடிக்கொள்ளும் வழி.

ஒவ்வொரு வருஷமும்

விபரமறிந்தோரில் ஆயிரக்கணக்கானவர் மிக வலிமையுள்ளதும் ஜனங்களின் நம்பிக்கையை மிக அதிகமாகக் கொண்டுள்ள இந்திய லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனியாகிய

ஓரியண்டலிலேயே

தங்கள் ஆயுளை இன்ஷ்யூர் செய்து வயோதிக காலத்தில் தங்களுடைய அல்லது தங்களுக்குப் பின் தங்களை நம்பியிருப்போரின் பொருளாதார சுதந்திரத்திற்கு அஸ்திவாரக்கல் நாட்டிக்கொள்கின்றனர்.

தாமதம் வேண்டாம்!

இன்றே ஒரு ஓரியண்டல் பாலிஸியை எடுத்துக்கொள்ளுங்கள்.

ஓரியண்டல்

கவர்ன்மெண்டு செக்யூரிட்டி லைப் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்.

ஸ்தாபிதம் 1874. தலைமை ஆபீஸ்: பம்பாய்.

இந்தியாவெங்கும் பிரதிநிதிகளும், கிளைகளும்.

விபரங்களுக்கு எழுதுங்கள்:—

பிராஞ்சு காரியதரிசி, ஓரியண்டல் லைப் ஆபீஸ், 251, மேலமாசிவீதி, மதுரை.


## ராஜபாளையம் காங்கிரஸ் கமிட்டி

ராஜபாளையம் காங்கிரஸ் கமிட்டிக்கு அடியிற்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்:—ஸ்ரீமான்கள் எஸ். பிள்ளையார்சாமிதேவர் (தலைவர்); பொன்னுச்சாமிதேவர் (காரியதரிசி); கிருஷ்ணஸாமி நாயுடு (கஜான்ஜி); சேத்தூர் டவுன் காங்கிரஸ் கமிட்டிக்குக் கீழ்க்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஸ்ரீ கோமதித் தேவர் (தலைவர்); கே. சுவாமிநாதன் (காரியதரிசி); எஸ். வி. ஆர். பழனியப்பன் கஜான்ஜி.

## இலட்சுமிபுரம், மீனாட்சி சங்கம்

இச்சங்கத்தின் மாதக்கூட்டம் நாளது வைகாசி 5௳ (19-5-39) மாலை 4 மணிக்கு சொக்கலிங்க வித்தியாசாலையில் சேமத்தான்பட்டி திரு. சோம. வீரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. வித்தியாசாலை மாணவ மாணவிகளால் பாட்டு, பேச்சு, நடிப்பு, தேவாரம் முதலியன நடைபெற்றன. புதுக்கோட்டை ஆசிரியர் திரு. T. V. ராமச்சந்திர ஐயரவர்கள் "கல்வியும் கைத்தொழிலும்" என்னும் பொருள்பற்றி ஓர் சொற்பெருக்காற்றினார்கள். இறுதியில் சங்க வாழ்த்தும், நாட்டு வாழ்த்தும் பாடப் பெற்றதும், வித்தியாசாலை அதிபர் திரு. ந. சொ. அரு. அருணசலம் செட்டியாரவர்கள் தலைவரவர்களுக்கும் சொற்பெருக்காளருக்கும் மாலை சூட்டி வந்தனங் கூற அனைவருக்கும் கற்கண்டு வழங்கப்பெற்றுக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## சிவகெங்கையில் தோழர் ந. சோமயாஜுலு

மே 18௳ மாலை 7 மணிக்கு இவ்வூர் அரண்மனை வாசல் முன்பாக சிவகெங்கை நகரக் காங்கிரஸ் கமிட்டியினுதவில் அட்வகேட் ஆர். ராமானுஜம் அவர்கள் தலைமையில் ஓர் காங்கிரஸ் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினரும் தமிழ்நாடு காங்கிரஸ் அபேதவாதக் கட்சி நிர்வாகக் கமிட்டி மெம்பருமான சங்கரன் கோவில் தோழர் ந. சோமயாஜுலு அவர்கள் அன்னிய நாட்டின் அரசியல் நிலை, திரிபுரி தேசியக் கோரிக்கைத் தீர்மானம் யுத்த எதிர்ப்பு, காங்கிரஸ் மந்திரி சபை செய்துள்ள வேலைகள், காங்கிரஸில் அனைவரும் சேர்ந்து சுதந்திரத்திற்காக பாடுபட வேண்டியதன் அவசியம், என்பனபற்றி சுமார் 3 மணி நேரம் பேசினார்கள்.

## பொதுநல ஊழியர் சங்கம் காரைக்குடி

இச்சங்கத்தின் முதலாவது சாதாரணக் கூட்டம் 20-5-39 காலை 9 மணிக்கு காரைக்குடி முத்துப்பட்டணம் விஸ்வநாத விலாஸில் தலைவர் ஸ்ரீ சா. மு. விஸ்வநாதன் அவர்கள் தலைமையில் கூடியது. அப்பொழுது நமது நகரில் பல பாகங்களில் நியூசன்ஸ்கள் மிகுதியாக நடைபெறுவதால், நமது நகர சபையாரும், நகர் போலீசாரும் நன்கு கவனித்து அதி விரைவில் ஆவன செய்யவேண்டும் என்றும், செக்காலை ரோட்டிலிருந்து முத்துப்பட்டணத்துக்கு வரும் வீதியின் சந்திப்பில் ஓர் போலீஸ் பீட் நியமனம் செய்ய வேண்டுமென்று நகர போலீசாரையும், மணிக்கூண்டு ஒன்று கட்ட நன்கொடை அளித்த ஸ்ரீ மரு. சு. ரெத்னவேலுச்சாமி செட்டியாரை இச்சங்கம் பாராட்டுவதுடன், ஷை மணிக்கூண்டிற்கு வைக்கப்படும் கெடிகாரம் திருக்கு வைத்த கெடிகாரமாக இருக்கவேண்டுமென்றும், சாக்கடைத் தண்ணீரை அடிக்கடி அப்புறப்படுத்த வேண்டுமென்றும். வாரம் இரு முறை நமது நகரில் கொசு ஒழிப்புதினம் இருக்கவேண்டும் என்றும் நகர சபையாரையும் கேட்டுக் கொள்கிறது என்றும், காரைக்குடியிலிருந்து கோட்டையூர்க்குச் செல்லும் ரோடு பாதி செப்பனிட்டும் பாதி செப்பனிடாமலும் மிகச் சீர்கேடாகவும் இருப்பதால் இதனை இராமநாதபுரம் ஜில்லா போர்டார் நன்கு கவனித்து செப்பனிடும்படி இச்சங்கம் ஷை போர்டாருக்கு அறிவிக்கிறது நமது நகர் எல்லைக்குள் வரும் வண்டிமாட்டு வாகனாதிகளில் மாடுகளை இம்சிக்கும் பொருட்டு உபயோகிக்கப்படும் தார்க்கம்புகளை நகர சபையாரும் நகர் போலீசாரும் நன்கு கவனித்து ஷை கம்புகளை இனிமேல் உபயோகிக்காமல் இருக்கும்படி செய்யவேண்டியது என்று இச்சங்கம் கோருகிறது என்றும் மற்றும் பல தீர்மானங்கள் நிறைவேறின.

## இளைஞர்கட்கு ஆலோசனை

ஸ்ரீ M. சின்னையா செட்டியார் எழுதிய சமூக சீர்திருத்த நூல். 40 அரிய கட்டுரைகள் அடங்கியது. 200 பக்கங்கள் கொண்டது.

விலை ரூபாய் ஒன்று. தபாற் கூலி வேறு

இடைக்கு மிடங்கள்—
M. சின்னையா செட்டியார்,
மகிபாலன்பட்டி.

குமரன் ஆபீஸ், காரைக்குடி.


### ஒடுவன்பட்டி

மே-மீ 16வ மாலை 6 மணிக்கு ஆசிரியர் கணபதி அய்யாவின் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது. "நமக்கு வேண்டிய கல்வி" என்பதைப்பற்றி தமிழிலும் ஹிந்துஸ்தானியிலும் மாணவர்கள் சிறு உபந்நியாசம் செய்தனர். பின்னர்கீழ் கண்ட தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. "ஒடுவன்பட்டி என்பதுதான் இந்தக் கிராமத்திற்குப் புராதன காலம் முதல் வழங்கிவரும் பெயர். ஆனல் சிங்கம்புணரி சப் ரிஜிஸ்திரார் ஒடுவான்பட்டி என்று ரிஜிஸ்தர் செய்துவருகிறார். அது தப்பு. இதை அவரே திருத்திக்கொள்ள வேண்டியது. பொதுஜனங்கள் சொல்லியும் பலன் இல்லை. இதனல் ஒடுவன்பட்டி கிராமத்தினருக்குக் கொடுக்கல் வாங்கல் முதலியவைகளில் பொருட் செலவும் சிரமமும் உண்டாகின்றன. இதை ரிஜிஸ்ட்ரேஷன் இலாகா அதிகாரிகள் உடன் கவனித்து ஒடுவன்பட்டி என்று பதிவு செய்யும்படி சிங்கம்புணரி சப் ரிஜிஸ்திராருக்குக் கட்டளையிடும்படி கோரப்படுகிறது."

### கண்டரமாணிக்கம் தி. கா. சபை தேர்தல்

மே 17வ மாலை 4 மணிக்கு நடுவிக்கோட்டை திரு. வே. சுப்பையா பிள்ளை தலைமையில் தேர்தல் நடைபெற்றது. புது வருஷத்திற்கு தலைவர்: திரு. பெரி. சுப. நாராணன் செட்டியார்; உப தலைவர் திரு. வயி. பெ. பெருமாள் தேவர்; காரியதரிசி: திரு. கா. பழ. நா. நாராயணன் செட்டியார்; உபகாரியதரிசி: வீர. மு. வெள்ளைச்சாமி பிள்ளை; பொக்கிஷதார்: திரு. வி. சா. காசி செட்டியார்; இவர்களுடன் நிர்வாக சபை மெம்பர்களும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## — மதிப்புரை —

### பொம்மையா மனைவியா?

[ஆசிரியர்: ஹென்ரிக் இப்ஸன். மொழி பெயர்த்தவர்: க. நா. சுப்பிரமணியம், பி. ஏ. பக்கம் 16-. விலை: 8 அணா. கிடைக்குமிடம்: நவயுகப் பிரசுராலயம் லிமிடெட், ஜி. டி. மதராஸ்]

நார்வே தேசத்து நாடகாசிரியர் எழுதிய நாடகத்தை ஸ்ரீமான் க. நா. சுப்பிரமணியன் எளிய தமிழ் நடையில் மொழிபெயர்த்திருக்கிறார். இந் நாடகம் உலகப் பிரசித்தி பெற்றது. வெறுங் கற்பனையல்ல. வாழ்க்கையில் நம் கண்முன்னே நடைபெறும் சம்பவங்களைக் கொண்டு கட்டப்படும் ஒரு கதை. சிரஞ்சீவியாக வாழுமல்லவா? இதனல்தான் இந்நாடகம் உலகிலுள்ள முக்கிய பாஷைகளிலெல்லாம் மொழிபெயர்க்கப்பட்டு, இன்றும் நாடக மேடைகளில் நடிக்கப்பட்டு வருகிறது. ஆனல், தமிழ் நாட்டார் இவ்வுயரிய சிற்பியின் கலைத்திறனை அறிந்து இன்புறும் சந்தர்ப்பம் இப்பொழுதுதான் கிட்டியிருக்கிறது. உண்மைக்காதலுக்கும், வெறும் பிரேமைக்கும் உள்ள வித்தியாசத்தை ஆசிரியர் இந்தக் கதை மூலம் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார். "நான் உன்னைப் போலவே ஒரு புத்தியுள்ள மனுஷ்ய ஜீவன்; முதலில் நான் அறிவு படைத்தவளாக முயலவேணும். தார்வால்ட், ஜனங்கள் எல்லோரும் உன் கட்சியைத் தான் ஆதரிப்பார்கள்: புத்தகங்களில் கூட உன் கக்ஷி தான் எழுதப்பட்டிருக்கிறது என்றும் எனக்குத் தெரியும். ஆனல் இனிமேல் பலர் சொல்வதைக் கொண்டும், புத்தகங்களில் எழுதப்பட்டிருப்பதைக் கொண்டும் நான் திருப்திபடைய மாட்டேன். நான் சுயமாகவே யோசனை செய்து, தீர்மானித்து, ஞானம் பெற முயலவேண்டும்" என்று கதாநாயகி கூறிக்கொண்டு சுதந்திர வாழ்க்கையை நாடி, இதுகாறும் தன் புருஷனாக இருந்தவனை விட்டுப் பிரிந்து வெளியேறுங் காட்சி, ஆடவரது அநியாயக் கட்டுப்பாட்டினின்றும் விடுபட்டு, சுயேச்சையை நாடிச் செல்லும் நம் நாட்டுப் புதுமைப் பெண்ணின் வீரத்தைப் பிரதி பலிப்பது போலிருக்கின்றதல்லவா? "நான் என் வீட்டில் அப்பாவின் பொம்மைக் குழந்தையாக இருந்தது போல் இங்கு உன் பொம்மை மனைவியாக இருந்தேன்" என்று அவள் முன் ஓரிடத்தில் கூறியிருப்பது இதை வலியுறுத்துகின்றது? எல்லோரும் படித்தின்புற வேண்டிய நாடகம்.

★

### 'செந்தமிழ்ச் செல்வி'

திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார் வெளியிட்டு வரும் இச்சீரிய மாதப்பத்திரிகை, சென்ற சில திங்களாக வெளிவாராது தங்கியிருந்து மீண்டும் வெளிவர ஆரம்பித்துள்ளது. இதில் ஆசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள் அறிவுடை நம்பி யென்றும், பண்டிதஞா. தேவநேயப்பாவாலர் 'பாணர்' என்பது பற்றியும், திரு. ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் தமிழின் தற்கால நிலையில் தமிழ் மகளிர் செயற்குரிய பணிகள் பற்றியும் வரைந்துள்ள பொருள் மிகுந்த கட்டுரைகள் காணப்படுகின்றன.

★

### 'லோக சக்தி'

சென்னை மாகாண இளைஞர் இயக்க மாத வெளியீடு. ஆசிரியர்கள்: ஸ்ரீமான்கள் ம. கி. திருவேங்கடமும், சக்திதாசன் சுப்பிரமணியனும். சுவாமி சுத்தானந்த பாரதியாரின் இளைஞர் இயக்க முரசு முதற்பக்கத்தில் ஒலிக்கின்றது. நாட்டிலுள்ள இளைஞர் சக்திகளை யெல்லாம் ஒருங்கு திரட்டிப் பலப்படுத்த "லோகசக்தி" உதவி புரியும் என்று 'நமது நோக்கம்' என்ற தலைப்பில் கூறப்பட்டிருக்கிறது. பெரும்பாலும் இளைஞர் இயக்கம் சம்பந்தமான கதைகள், கட்டுரைகள், கவிகள் முதலியன இதழை அலங்கரிக்கின்றன. வருடச் சந்தா உள்நாடு ரூ 1. 'லோக சக்தி' ஆபீஸ், மௌண்ட் ரோட், சென்னை.

## ஹரிஜன் கிணறுகளுக்கு ரூ 4750

தேவகோட்டை சப் டிவிஷனில், ஆதித்திராவிடர்கட்காகக் கிணறுகள் வெட்ட ரூ. 4750 செலவு செய்ய கவர்ன்மெண்டார் தீர்மானித்திருக்கிறார்கள். எங்கெங்க இடத்தில் கிணறுகள் வெட்டலாமென்று யோசனை கூறும்படி காரைக்குடி ஜில்லா ஹரிஜன சங்கக் காரியதரிசி ஸ்ரீமதி கமலா சிவசுப்பிரமணியம் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார். இத்திட்டம் 1940 மார்ச் 31-ந் தேதிக்குள் நிறைவேற்றப்படும்.

கம்ப ஹாவைச்சேர்ந்த வாரம்பாலையில் மே 17ந் தேதி ஸ்ரீமதி எம். பி. லீலாவதி என்னும் மாது ஒரே பிரசவத்தில் மூன்று குழந்தைகளை ஈன்றாள். மூன்றும் ஆண் குழந்தைகள். அவை சௌக்கியமாக இருக்கின்றன.


காச நோயென்று கவலை வேண்டாம்!
நோயின் கொடுமையால் செய்யக் கூடாத செயல்களைச் செய்வதைக் காட்டிலும்
சி. எம். சாமி தாளகபஸ்பம் உட்கொண்டு சுகம் பெறுங்கள்
புட்டி 1க்கு விலை ரூ 4.
சிறந்த இருமல் மருந்து
காசம், க்ஷயம், ஈளை, இருமல், இளைப்பு, மார்சளி சுவாசப்பை சம்பந்தமான சகல கெடுதல்களும் நீங்கும்.
பிராஞ்சு - 1/54 அருணசல நாயக்கன்தெரு சிந்தாதிரிப் பேட்டை மதறாஸ்
மலையப்பசாமி வைத்தியசாலை, பழனி.

தன் வியாபாரத்தின் நுக்ஷ்மம் நன்கு அறிந்தவனாயினும் இவன் பணத்தை அழிக்கிறான்
திவ்யமான கார் ரொம்ப விலை யோ?
ரூ 5000; ஆனல் என் வியாபாரத்தின் பொருட்டு எனக்கு ஒரு கார் அவச்யம்
எந்த எண்ணெய் ஸார்?
எதுவானாலும் சரி. ஆனல் மலிவாயிருக்கட்டும்
இந்த எஞ்ஜின் ரொம்ப சூடாகிறது, இல்லை?
கொஞ்சம் ஜாஸ்தியாயிருக்கலாம்—ஆனல் அதற்காக கவலைப்பட வேண்டியதில்லை
சாமார்த்தியமும் கவனமும் நிறைந்த வியாபாரிகளுக்கூட முறையாக லூப்ரிகேஷன் செய்யா விட்டால் ஏற்படும் சேதத்தை உணர்வதில்லை.
மட்டமான எண்ணைகளை வாங்குவதால் சில அணக்கள் மட்டுமே மிச்சமாகின்றன. ஆனல் ரிப்பேர்ச் செலவு ஏறிக்கொண்டே போகும்.
பத்திரம்! கார்காயில் கிளியரோசால் முறையில் சுத்திகரித்த மோபில் ஆயில் உங்களுக்கு பரிபூர்ணமான லூப்ரிகேஷனைக் கொடுப்பதுடன், உங்கள் எஞ்சினுடைய உபத்திரவங்களை யகற்றி நீண்ட ஆயுளைக் கொடுக்கும்.
கிராங்க்கேஸ, கியர்பாக்ஸ் & பின் அச்சை வடித்துவிட்டுகார்காயில் மோபில் ஆயில் சார்ட்டில் சிபார்சு செய்யப்பட்டதும் எல்லா ஸ்டாண்டர்ட் — வாகுவம் பெட்ரோல் ஸ்டேஷன்களிலும் நல்ல வியாபாரிகளிடமும் கிடைக்கும். எண்ணை ரகங்களையே நிரப்புங்கள்.
GARGOYLE Mobiloil
வீண் அபாயத்திற் குள்ளாகாதீர்கள்!
மோபில் ஆயிலினல் கார்கள் மிக நன்றாக உழைக்கும்.
ஸ்டாண்டர்ட் வாக்குவம் ஆயில் கம்பெனி,
(கம்பெனி பெம்பர்களின் பொறுப்பு பரிமிதப் பொறுப்பு)




## நோட்டீஸ்

### சிவகெங்கை டிஸ்ட்டிரிக்டு முன்சிபு கோர்ட்டு

1939ஞு O. S. No 41

மது. பழ. சொக்கலிங்கம் செட்டியார் } வாதி

முரு. பழ. முரு. சொக்கலிங்கம் செட்டியார் என்ற முருகப்ப செட்டியார். } 4-ந்து பிரதிவாதி

இந்த நிம்பரில் 7ம் பிரதிவாதிக்கு பாத்தியமான ஸ்ரீதனப்பணம் வகையரு ஷையார் புருஷனை வாதிபேரால் இந்த நிம்பர் 1 முதல் 6 வரைப் பிரதிவாதிகள் வகையரு பொதுக் குடும்பத்துக்குப் பாத்தியமான கொழும்பு முரு. பழ. முரு. கடையில் விருத்தியாம்சத்துக்காக கொடுத்து வைக்கப்பட்டு டிபாசெட்டாகவேயிருந்து வருவதில் அசல் வட்டியுள்பட கூடிய தொகை ரூபாய் 2589—1—9ம் கொழும்பு புது நடப்பு வட்டியுடனும் இவ்வியாஜ்ஜியச் செலவுடனும் வரப்பற்ற வாதியால் பிரகிருதபிருது தாக்கல் செய்து 1939ஞு ஜூன்-மீ 15-வ வாய்தா யேற்பட்டிருக்கிறது. அன்று பகல் 10 மணிக்கு இந்தக் கோர்ட்டுமுன் ஆஜராகி ஆக்ஷேபணைகளை தெரிவித்துக் கொள்ளாவிடில் ஒருதலைபக்ஷமாக தீர்மானிக்கப்படும்.

M. S. ராமஸ்வாமி அய்யர்,
வாதி வக்கீல், சிவகெங்கை.
17—5—39.

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

மேல்நாட்டு 'சயன்ஸ்' படித்தால் தான் இவைகட்கு அர்த்தம் தெரியும் போலும்! யூனிவர்சிட்டியில் காகிதத்தை வைத்துக் கண்ணில் தேய்த்துவிட்டார்களே.

தொண்டாற்றுவதிலே ஒரு மகிழ்ச்சி. அப்பர் உளமாரத் தொண்டு செய்தார். தொண்டு செய்வதில் ஒரு திருப்தியும் தமக்குத் தாமே மகிழ்ச்சியும் உண்டு. மகாயுத்தம் ஆரம்பமானபோது திடகாத்திரமானவர்கள் யுத்தத்தில் கலந்து கொண்டார்கள். சர் ஆலிவர் லாட்ஜ் என்ற கிழவர் யுத்தக் கப்பல்களைத் துடைத்துச் சுத்தம் செய்யும் தொண்டையாவது செய்கிறேன் என்று முன் வந்தார்.

ஜடவஸ்துக்கள் மூன்று—கட்டியாக இருப்பது, திரவ பதார்த்தம், வாயு. கம்பர் இதை ஐந்தாகக் காட்டியுள்ளார்,

வானின்றிழிந்து வரம்பிகந்த
மாபூதத்தின் வைப்பெங்கும்
ஊனும் உயிரும் உணர்வும் போன்று
உள்ளும் புறத்தும் உளனென்ப
கூனும் சிறிய கோத்தாயும் கொடுமை
யிழைப்பக் கோல் துறந்து
கானுங்கடலுங்கடந்து இமையோர்
இடுக்கண் காத்த கழல் வேந்தை

தேகத்தின் ஒவ்வொரு உறுப்பிலும் ஒவ்வொரு உணர்ச்சியைப் பார்க்கிறோம். இது உணர்ச்சி தத்துவம். மழை பொழிகிறது பனிபெய்கிறது. இதெல்லாம் ஜட தத்துவம்.

கம்பரின் சமயம் கடவுள் ஒருவனே; எல்லா வஸ்துக்களும் அவன் கீழ் அடக்கம் என்பதுதானாகும். எந்த வஸ்துவிலும் அவனைக் காணலாம் என்பதாகும்.

### "சூரி"யில் பயர்ஸ்டோன் டயர் தொழிற்சாலை

29—4—39-வ காலை, பையர்ஸ்டோன் டயர் அண்டு ரப்பர் கம்பெனி ஆப் இந்தியா லிமிடெட் கம்பெனியார் இந்தியாவில் கட்ட ஆரம்பித்திருக்கும் தொழிற்சாலை கட்டிட வேலை துவக்கமாயிற்று. கம்பெனியின் மானேஜிங் டிரெக்டர் திரு H. K. ஹார்த், ஷை கம்பெனியின் ஹோம் ஆபிஸ் கட்டிட இன்ஜினியர் திரு H. H. மாக்கிரகர் இருவரும் வந்திருந்தனர். இந்த புதிய பாக்டரியானது இந்திய கைத்தொழில் அபிவிர்த்தியில் ஒரு முக்கிய அம்சமாக விளங்கு மென்பதில் ஐயமில்லை. மேலும் ஆர்வமும் தொழில் ஊக்கமும் மிக்க இந்திய வாலிபர்களுக்கும் இது ஓர் அரிய சந்தர்ப்பமாகின்றது.

### சுபாஷ்பாபுவுக்குத் தடை

இந்தூர் பிரஜா மண்டல மகாநாட்டை மே 13வ சுபாஷ் சந்திர போஸ் திறந்துவைக்க ஏற்பாடாகியிருந்தது. ஆனல் சமஸ்தானத்தைச் சேராதவர்கள் அதில் பேச அனுமதிக்கப்பட மாட்டார்கள் என்று அதிகாரிகள் தெரிவித்ததன் மேல், அந்த ஏற்பாடு ரத்து செய்யப்பட்டது.

### காளையார்கோவில்

நிகழும் வைகாசிமீ 2வ ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸ வாசகசாலையின் மாதாந்தக் கூட்டம் ஷை தலைவர் முத்து ஆதிமூலம் பிள்ளையவர்கள் தலைமையில் இரவு 9 மணிக்கு கூடி சமீபத்தில் நடைபெறும் மஹோத்ஸவத்தில் உண்டியல் வசூல்செய்வதென்றும் வாசகசாலையில் ஒரு உபந்நியாச சபை ஏற்படுத்துவதென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.


இனம்! ரூ 50 இனம்!!
"சித்தி கவசம்"
லக்ஷக்கணக்கான ரூபாயைச் செலவிட்டு நிறைவேருத காரியங்கள் இந்த யந்திரத்தைக் கட்டிக்கொண்ட மாத்திரத்தில் கைகூடும். வெகு அற்புத சக்திவாய்ந்தது. இதைக் கட்டிக்கொள்ள கடுமையான கட்டுப்பாடுகளில்லை. உங்களை வெறுக்கும் மனைவி உங்கள் பேரில் அதிசயிக்கத் தக்க அபாரமான காதல்கொள்வாள். சத்துருக்களை ஜயிக்கலாம். கெட்ட கிரகங்களைத் துலைக்கலாம். பரீக்ஷைகள், வியாபாரம், லாட்டரி, கேசுகள், தொழில், வேலை, எல்லாம் வெற்றிபெற நடக்கும். குழந்தை பிறக்கும். ஐஸ்வரியம் பெருகும். இதைப் பொய்யென்று நிரூபித்துவிட்டால். ரூ. 50 இனம். தாம்பிர கவசம் ரூ. 2. வெள்ளி ரூ. 3. தங்கம் ரூ 9.
கடிதங்களை இங்கிலீஷில் எழுதவும்.
SARWARTH SIDHI ASHRAM
No. 105, P. O. Mirchaigani, Patna-

சகலவிதமான பல் வியாதிகளுக்கும் பல் கட்டுவதற்கும்
K. அஸூமா ஜப்பானிய பல் டாக்டர் புதுக்கோட்டை
அவர்களிடம் வாருங்கள்.
பொதுஜன சவுகரியத்தை முன்னிட்டு எங்கள் ஆபீஸ் மதராஸிலிருந்து புதுக்கோட்டைக்குமாற்றப்பட்டிருக்கிறது.

6—4—37ந்-தேதி முதல் 50 ரூ கிரயமுள்ள மருந்தை ரூ. 15-க்கு குறைக்கப்பட்டிருக்கிறது.
வைத்திய சாதிரத்தில் மகா நிபுணர். முப்புவை கண்டுபிடித்தவர். அநேக டாக்டர்களால் தீராதெனக் கைவிடப்பட்ட கொடிய ரோகங்களை எல்லாம் தீர்த்து உலகமெங்கும் நல்ல புகழும் கீர்த்தியும் பெற்றவர். தீராத ரோகங்களை எல்லாம் தீர்க்கும் வல்லமையுடையவர்.
பழனி வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே.
வேலுசாமி பிள்ளை
நீங்கள் அநேக மருந்துகளை சாப்பிட்டு உங்கள் வியாதி தீராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களா? அப்படியானல் வைத்திய ஆசிரியர்
பழனி ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளைக்கு
எழுதுங்கள்
உங்கள் வியாதி எதுவாயிருந்தாலும் சரி நிவர்த்திக்க வல்லமையுடையவர்!!
முப்பு அண்டு மகா மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட
பழனி ஆர். எம். கே.
தாம்பர பஸ்பம்
சாப்பிடுங்கள்.
உங்கள் கவலை தீர்ந்துவிடும். சகல வியாதிகளுக்தும் கைகண்ட மருந்து. திமிர் குஷ்டம் தீர்ந்துவிட்டது.
மதமதப்பு மாறி சோரணை உண்டாகிவிட்டது.
ஆறுத ரணம், குழிப்புண்களெல்லாம் ஆறிவிட்டது.
ரெக்தி, மேகப் பத்துகளெல்லாம் படல் படலாய் உதிர்ந்துவிட்டது.
இருமல், இளைப்பு பறந்துவிட்டது. வெள்ளைக் குஷ்டம் தீர்ந்துவிட்டது.
பத்தாயிரக்கணக்கான குஷ்டம், திமிர், மதமதப்பு, குறைநோய், குழிப்புண், ரணங்களும், விஷகடியால் பத்துவிழுந்து தடிப்புகளுண்டாகி குஷ்டமாகி ஆறுத ரணங்களும் தீர்ந்துவிட்டது. குன்மம், நீரழிவு, காசம், க்ஷயம், ஈளை, இருமல், சூதக வயிற்றுவலி, மலடு, வெள்ளை, வெட்டை, கடுப்பு, எரிச்சல், வியாதிகளும் வெட்டை முத்தி கால் குடைச்சல், கைகால் முடக்கு கிரந்தி, மேகநீர் மேகபத்துகளும் கண்டமாலை, அண்ட வீக்கம் வலி, மூலம் பவுத்திரம் முதலியசகல வியாதிகளும் இதில் தீர்ந்துவிட்டது.
அரிகிரந்தி, சொரிகிரந்தி, செங்கிரந்தி, கருங்கிரந்தி, கருங்குஷ்டம் கருமேகமும் தீர்ந்துவிட்டது. சொரி, மேக ஊரல், அரிப்பு, செம் மேகத்தடிப்பும், கைகால் சொரணையற்று திமிர்த்து மத மதப்பேறி காது, மூக்கு உதடு பெருத்து, பாதமெல்லாம் வெடித்து குழிப்புண் விழுந்து, புரையோடிப் புழுத்து, நாற்றமெடுத்து, சீழாய்க் கொட்டி விரல்கள் அழுகி இத்து இத்து விழுந்து குழகுழவென்று அழுகிப்போன குஷ்டரோகங்களெல்லாம் சொஸ்தமாகி விட்டது.
அநேக மருந்துகள் சாப்பிட்டும் தீராத ரோகங்களை எல்லாம் தீர்த்து அடங்காத தாதுபுஷ்டி புத்திர சந்தானம் உண்டாக்கி இருக்கிறது.
50 நாள் தாம்பரபஸ்பம் அனுபானம் குஷ்ட சூரணம் } விலை ரூ. 15—0—0
25 நாள் ஷை 7—8—0
ஏழைகளுக்குப் பாதி விலை கிடையாது.
பிரபுக்களுக்கு கிரயம் வேறு. 25 நாள் மருந்திற்கு குறைந்து கொடுக்கப்படமாட்டாது.
குழகுழவென்று அழுகிப்போன குஷ்டரோகங்களெல்லாம் சொஸ்தமாகிவிட்டதற்கு அடையாளமாக ஆயிரக்கணக்கான சர்ட்டிபிகேட்டுகள் அடங்கிய நற்சாக்ஷி புஸ்தகத்தைப் பாருங்கள். பேப்பரைக் குறிப்பிட்டு எழுதினல் ஷை புக்கும் கேட்லாக்கும் இனமாய் அனுப்பப்படும்.
வைத்திய ஆசிரியர்,
ஆர். எம். கே. வேலுசாமி,
சித்த வைத்தியசாலை, பழனி, S. I.
தந்திவிலாசம்:— வேலுசாமி, பழனி.
பிராஞ்சு:— 16 திருவல்லிக்கேணி, ஹைரோடு, சென்னை.

## யாழ்ப்பாணம் மகேசுவர பூஜை

நிகழும் வைகாசி 15உ சோமவாரத் தன்று, பகல் திருவண்ணை நகர் ஸ்ரீ கதிர் வேலாயுதசுவாமி கோவிலில் விசேட அபிஷேக ஆராதனையும், மகேஸ்வர பூசையும் அன்னதானமும், அடுத்த நாள் இரவு கணக்கப்பிள்ளைகளுடைய செலவில் உயர்ந்த மேளவாத்தியத்துடன் சுவாமி வெள்ளி மயூர வாகனரூடராய் திருவீதி வலம் வரும் காட்சியும் நடைபெறும்.

## ஸோமயாக மகோத்ஸவம்

நன்னிலம் தாலூகா திருவம்பர் மாகாளமென்னும் கோயிற்திரு மாகாள க்ஷேத்திரத்தில் முக்தியடைந்த ஸ்ரீ ஸோமயாஜி மாற நாயனாரின் ஸோமயாக மகோத்ஸவம் நிகழும் வைகாசி 9-ந்தேதி ஆரம்பமாகிவிட்டது. 11உ காலை 9 மணியளவில் ஸ்ரீ நாயனார் தமது பத்தினியாருடன் யாகசாலைக்கு எழுந்தருளி யாகம் செய்வதும், பகல் 12 மணிக்கு ஸ்ரீ தியாகராஜப் பெருமான் சண்டாள வேடர் தாங்கி யாகசாலைக் கெழுந்தருளி அவிர்ப்பாகம் பெறுவதும், 12உ யாகசாலையிலிருந்து ஓடிய பிராமணர்களுக்கு தரிசனம் அளிப்பதும் 13உ ஸ்ரீ பத்திரகாளியம்மன் பூசைசெய்யும் ஐதீகமும் நடைபெறும்.

## காளையார்கோயில் பிரமோத்ஸவம்

வைகாசி 8உ தொடக்கி 17உ வரைநடைபெறும். 4-ந் திருவிழா முதல் விசேஷமேளம். 9-ந் திருநாளன்று ரதோத்ஸவம். 10-ந் திருநாள் தெப்போற்சவம். 4-ந் திருநாள் இரவு புஷ்பப் பல்லக்கு.

## அரியக்குடி பிரமோத்ஸவம்

வைகாசி 11உ வியாழக்கிழமை தொடங்கி 22உ திங்களன்று முடிவுறும். 11ந் திருவிழாவன்று இரவு வெள்ளிரதம். 12உ திருவிழாவன்று பகல் தெப்பம்: இரவு பங்களா தெப்பம்.

## சிவகெங்கையில் ஆண்டு விழா

ராஜா உயர்தரக் கலாசாலை பழைய மாணவர் சங்கத்தின் 34-வது ஆண்டு விழா 14-5-39 காலை 8 மணிக்கு ராஜா உயர்தரக் கலாசாலையில் நடந்தது. ஸ்ரீமான் மகாதேவய்யரவர்கள் (பென்ஷன் கலால் சப் இன்ஸ்பெக்டர்—பழைய மாணவரில் ஒருவர்) தலைமைப் பதவி வகித்தார். காலை 8 மணிக்கு விளையாட்டுகள் நடந்தன. பகல் 12 மணிக்கு பழைய மாணவர்களுக்கு விருந்து அளிக்கப்பட்டது. மாலை 6 மணிக்கு பழைய மாணவரின் புகைப் படமெடுக்கப்பட்டது. 6-30 மணிக்கு விளையாட்டில் தேர்ந்தவர்களுக்குத் தலைவரவர்களால் பரிசு வழங்கப்பட்டபின் பொதுக்கூட்டம் நடந்தது. அவ்வமயம் ஸ்ரீமான்கள் எச். சதாசிவய்யர் பி. ஏ., பி. எல்., ஸ்ரீ ஆர். நாராயணன் சேர்வை எம். ஏ. எல். டி. தலைமை ஆசிரியர் சொற்பொழிவாற்றினார்கள். இரவு 10 மணிக்கு ஷை சங்க மாணவர்களால் நந்தனார் நாடகம் அதிவிமரிசையாக நடிக்கப்பட்டது. அதில் நந்தனாராக நடித்த தோழர் ஸ்ரீ சிவராமகிருஷ்ணய்யரின் (திருப்புவனம் லோகல் பண்டு டாக்டர்) ஆக்ட் மிகவும் மெச்சத்தகுந்தது.

## சிவகெங்கை பிரம்மஞான சபை

ஷை சபையில் 19-5-39 மாலை 6-30 மணிக்கு ஸ்ரீமான் மேக்டா அவர்கள் ஆங்கிலத்தில் சொற்பொழிவாற்றினார்கள். காங்கிரசின் சிறப்பான கொள்கைகளை எடுத்துக்கூறி அதன்படி எல்லோரும் பின்பற்ற வேண்டுமென்றும் புது இந்தியா மேம்பாடாகச்சேர எல்லோரும் முன்வர வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள்.

## போலீஸ் உத்யோகத்துக்கு மாதர் போட்டி

அமெரிக்கப் போலீஸ் இலாகாவில் பெண்கள் தாராளமாகச் சேர்ந்து உழைத்து வருகிறார்கள். சமீபத்தில் இந்த இலாகாவில் 29 ஸ்தானங்கள் காலியாயின. இதற்கு 5000 மனுக்கள் வந்தன. 3000 பெண்கள் பரீட்சைக்குப் பணம் கட்டினார்கள்.

## சிவகெங்கையில் தடை உத்தரவு

(நமது நிருபர்)

முஸ்லிம் லீகைச் சேர்ந்த ஜனாப் யஸ். முகமத் இப்ராஹீம் ராவுத்தரும், மற்றும் எட்டுப் பேர்களும், சிவகெங்கை மகுதியில் கூட்டங் கூடக்கூடாதென தாலூகா மாஜிஸ்திரேட் 144-வது பிரிவுப் பிரகாரம் தடை யுத்தரவு பிறப்பித்தார். உள்ளூர் முஸ்லிம்களிடையே இரு கட்சிகளிருக்கின்றன. ஒன்று காங்கிரஸை ஆதரிப்பது; மற்றொன்று லீகை ஆதரிப்பது. கொஞ்ச காலத்துக்கு முன் முஸ்லிம் லீக்கினர் மகுதிமேல் தங்கள் கொடியை நாட்டினர். கொடியை அப்புறப்படுத்தா விட்டால், காங்கிரஸ் கொடியையும் அதோடு பறக்கவிடுவதாக காங்கிரஸ் முஸ்லிம்கள் கூறினர். போலீஸார் தலையிட்டதன் மேல் இரு கட்சியாரும், எந்தக் கட்சிக் கொடியையும் பறக்க விடுவதில்லையென்று ஒப்புக்கொண்டனர்.

மே 18உ இரவு மகுதிக்குள் ஒரு கூட்டம் நடத்த லீகினர் ஏற்பாடு செய்தனர். ஜனாப் மகமத் மஸ்தான் ராவுத்தர் தலைமையில் காங்கிரஸ் கட்சியினர் மகுதிக்குள் கூட்டங் கூடாமல் தடுக்கும்படி மேலதிகாரிகளுக்கு மனுச்செய்தனர். சமாதான பங்கம் ஏற்படுமென்று பயந்து, போலீஸார் தடை யுத்தரவு பிறப்பிக்கும்படி, மாஜிஸ்திரேட்டிடம் கோரினர். மாஜிஸ்திரேட் தடை யுத்தரவு பிறப்பித்தார். இரவு முழுவதும் மகுதியைப் போலீஸார் காவல் புரிந்தனர். இரவில், வெகு நேரத்துக்குப் பிறகு நகரத்தின் தென் கோடியில் லீகர்கள் கூட்டம் நடைபெற்றது. ராஜா அரண்மனை முன்பு அதே சமயம் காங்கிரஸ் கூட்டமும் நடைபெற்றது.

## நாட்டரசன்கோட்டை

பாரதி இலவச வாசகசாலை புத்தகாலய சகைத்தின் மாதாந்த சொற்பொழிவுக் கூட்டம் 20-5-39 மாலை 5-30 மணிக்கு கொட்டாரக்கரை ஸதானந்தபுரம் அவதூதாசிரமாதிபதி ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவிராஜகாசாரிய சுவாமி ஆத்மானந்த பாரதி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. "கல்வி" என்பதுபற்றி பண்டிதர் திரு. தா. முருகேசபிள்ளை அவர்கள் விரிவாகவும் அழகாகவும் பேசினார்கள். தலைவரவர்களின் நீண்ட முடிவுரைக்குப்பின் வந்தனோபசாரம் கூறப்பெற்று இரவு 8.45 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## தேவகோட்டை ராஷ்டிரபதி குரூப்

திரு. ராம. சொக்கலிங்கம் அயல்நாடு செல்வதை முன்னிட்டு ஷை சங்கக் கட்டிடத்தில் 20-5-39 இரவு 7 மணிக்கு வி. காசப்பா (குரூப் மாஸ்டர்) அவர்கள் தலைமையில் ஓர் வழிஅனுப்பு உபசாரக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ராம. சொக்கலிங்கம் அவர்களுக்கு கதர்மாலை அணிவிக்கப் பெற்று பிரிவு உபசாரப் பத்திரமும் வாசித்துக் கொடுக்கப் பெற்றது. பின்னர் அன்னாரின் சேவையைப்பற்றி பல அன்பர்கள் சொற்பொழி வாற்றினார்கள். திரு. ராம சொக்கலிங்கம் அவர்களுக்கு லெ. நா. நா. அழகப்ப செட்டியாரவர்களால் ஓர் டின்னர் பார்ட்டி நடத்தப்பட்டு இரவு 9 மணிக்குக் கூட்டம் இனிது நிறைவேறியது.

## அங்கத்தினர் தேர்தல்

(நமது நிருபர்)

தேவகோட்டை வர்த்தக சங்க அங்கத்தினர்கள் தேர்தலுக்காக முனிசிபல் ஹையர் எலிமெண்டரிப் பாடசாலைக் கட்டிடத்தில் 21-5-39 இரவு 8 மணிக்கு சங்க அங்கத்தினர்கள் கூடியிருந்தனர். பெரும் விவாதத்திற்கிடையே அடுத்த ஜெனரல்பாடி மீட்டிங்கில் தேர்தல் நடத்துவதென்று முடிவுசெய்யப்பட்டது. அதற்காக ஸ்ரீமான்கள் பொன்னுச்சாமி செட்டியார், நாராயணசாமி, பாடலிங்கம் ஆச்சாரி ஜனாப் அ. முகம்மது மைதீன் ராவுத்தர், ஜனாப் சம்சுதீன் சாஹிப் ஆகிய ஐவர் கொண்ட கமிட்டி ஒன்று நிறுவப்பட்டு கூட்டம் கலைந்தது. இதற்கு விஜயம் செய்திருந்த சில முக்கியஸ்தர்களுக்கு முனிசிபல் கவுன்சிலர் ஜனாப் பீருமுகையதீன் சாஹிப் பகதூர் ஒரு விருந்து நடத்தினார்.


யானை இருந்தாலும் 1000 பொன்
யானை இறந்தாலும் 1000 பொன்

என்ற பழமொழிபோல்,

எவன் ஒருவன் இன்ஷ்யூரன்ஸ் என்னும் புதையலைத் தேடுகின்றானோ அவன் தன் உயிரோடு விருத்தாப்பிய காலத்தில் இப்புதையலை வைத்து கவலையில்லாமல் சுகப்படலாம்.

அப்படி யேதேனும் விதிவசத்தால் அவனுக்கே மரணம் சம்பவித்தால், அது அவனது மனைவி மக்கட்கு பெரிய உதவியாகிறது. வரவுக்கு மீறி செலவு செய்து, இருக்கும் சொத்துக்களைப் பல வழிகளில் சிலவிட்டு விட்டு, தனக்குப் பிற்காலம் பெண்டு பிள்ளைகளை நடுத்தெருவில் விட்டு விடாதீர்கள்.

காற்றுள்ளபோதே தூற்றவேண்டு மாதலால், இன்றே திடசரீரத்துடன் இருக்கும்போதே இன்ஷ்யூரன்ஸ் செய்யும்

விவரங்களுக்கு உடனே விண்ணப்பித்துக்கொள்க:-

கவிபூஷணம் Dr. P. K. வெங்கடேசம்,
B. Sc. A., L. M. S., L. D. Sc., L. O. &c,
பிராஞ்சு செக்ரடரி,

நியூ கார்டியன் ஆப் இந்தியா லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,
புதுக்கோட்டை பிராஞ்சு.



ராம்பக் லயன் பாம் | ஜோனேகிரீம் மனோரா சிரப்
காயகல்ப மாத்திரைகள்
எல்லா மருந்து ஷாப்புகளிலும் ஸ்டோர்களிலும் கிடைக்கும்



501 ஸ்பெஷல் எப்பொழுதும் சிறந்து விளங்குவதின் காரணம் அதன் அதிக எடைதான்!

501 ஸ்பெஷலையும் அதே ரகத்திலும் விலையிலுமுள்ள பல்வேறு ஸோப்புகளில் ஏதாவதொன்றையும் நிறுத்துப் பாருங்கள். எப்போதும் வெற்றியடைவது 501 ஸ்பெஷல் தான்: ஏனெனில் அதில் ஸோப்பு அதிகமிருக்கிறது.

தங்கள் உயர்தரமான ஆடைகளை நன்கு விலைமதிப்போர்கள் அவைகளை வெளுப்பதற்கு சாதாரணமான ஸோப்புகளுக்குப் பதில் 501 ஸ்பெஷலைத் தான் உபயோகிக்கிறார்கள். 501 ஸ்பெஷல் மெல்லிசான ஆடைகளைப் பாதுகாப்பதோடு அவற்றை நீடித்த காலம் உழைக்கும்படியும் செய்கிறது. முற்றிலும் சுதேசி ஸோப்பாகிய 501 ஸ்பெஷலின் பெரிய பாக்கெட் ஒன்று இன்றே வாங்குங்கள்!

TATA TOMCO
501 "SPECIAL" HOUSEHOLD SOAP

விலையுயர்ந்த ஆடைகளை யெல்லாம் வெளுப்பதற்கு 501 ஸ்பெஷல் ஸோப்பை உங்கள் மனைவிக்கு வாங்கிக் கொடுங்கள்.
மிருகக் கொழுப்பற்றது
எல்லா நல்ல வியாபாரிகளிடமும் வாங்கக் கிடைக்கும்.
அல்லாமலும் கிடைக்குமிடம்:—
டாம்கோ விற்பனை இலாகா,
19 A, வாணியர் தெரு, மதராஸ்.
தி டாடா ஆயில் மில்ஸ் லிமிடெட் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டது.
டாடாபுரம், பம்பாய்.

தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்-பம்பாய் ஹவுஸ், பம்பாய்
தயவு செய்து உங்கள் ஸோப்புகளில் கொஞ்சம் மாதிரிக்கு இலவசமாக அனுப்பவும். தபால் செலவிற்காக ஓரணா தபால் வில்லை இத்துடன் அனுப்பி யிருக்கிறேன்.
பெயர்.....................
விலாசம்.....................
.....................நம்பர் K.R.11

டாடா கம்பெனியாரின் தயாரிப்பு.




## கல்விப் பிரசாரத்துக்கு சினிமா கோஷ்டி

கிராமப் புறங்களில் கல்விப் பிரசாரஞ் செய்ய வங்காள சர்க்கார் 10 சினிமா கோஷ்டிகளை ஏற்படுத்தியிருந்தனர். சுகாதாரம், கைத் தொழில், கல்வி, விவசாயம், கூட்டுறவு முதலிய பல விஷயங்களையும் பற்றி அறிவு புகட்டும் படங்கள் காட்டப்பட்டன. இதனால் ஏற்பட்ட பலனைக் கண்டு, இப்போது 21 கோஷ்டிகளை ஏற்படுத்தியிருக்கின்றனர். இது ஜில்லாவுக்கு ஒரு கோஷ்டி வீதமாகிறது.

O

### இந்திய நிபுணர் தேசயாத்திரை

இந்திய சலனப்பட சங்கத்தின் ஸ்தாபகரும், சலனப்படக் காங்கிரஸின் கூட்டுக் காரியதரிசிகளில் ஒருவருமான ஸ்ரீ கே. எஸ். ஹிர்லேகர் மே 11உ ஐரோப்பாவில் சுற்றுப் பிரயாணஞ் செய்யப் புறப்பட்டார். இவர் இந்தியப் படத்தொழில் நிபுணர்களில் ஒருவர். கல்விப் படங்களில் அதிக ஆர்வமுள்ள இவர், மேனாடுகளில் கல்வி போதனைக்காக சினிமாப் படங்களை எப்படி உபயோகிக்கின்றனர் என்று கவனிப்பார்.

O

### மோக்ஷம்

ஸ்ரீ யஸ். கோவிந்தராம் அவர்களது முயற்சியால் தோற்றுவிக்கப்பட்ட யுனை


பலமற்றவர்களுக்கு உயிர்த்துணை.

மதனமஞ்சரி

இம்மாத்திரைகள், அஜீர்ணம், மலச்சிக்கல், நரம்புத் தளர்ச்சி, ஞாபகக் குறைவு, மனத் தளர்ச்சி, மயக்கம், தூக்கமின்மை, பலவீனம், இவை யாவையும் ஒழித்து, ரத்தசுத்திசெய்து சரீரத்திற்கும் மூளைக்கும் வலுவை உண்டாக்குவதில் இதுநிகரற்றது.
40 மாத்திரை அடங்கிய டப்பி விலை ரூ 1
மதனமஞ்சரி பார்மஸி,
94, சைனா பஜார் ரோடு, மதராஸ்.


## சினிமாச் செய்திகள்

டெட் புரொடக்ஷனின் 'மோட்சம்' விரைவாகத் தயாராகிவருகிறது. இந்தப் புராணப் படத்தில் ஸ்ரீமதி வாசுந்தரா பிரதம நடிகை. ரவ்பகதூர் பி. சம்பந்த முதலியாரும் நடிக்கின்றார். பங்களூரில் மைசூர் ஸவுண்ட் ஸ்டுடியோவில் தயாராகிறது.

O

### ராமநாம மகிமை

பம்பாய் ஜோதி ஸ்டுடியோவில் ஸ்ரீ ஏ. யன். கல்யாணசுந்தரம் தயாரிக்கும் படம், அநேகமாக முடிந்துவிட்டது. ராமாயணக் கதையின் ஒரு பாகத்தை அடிப்படையாகக் கொண்டது. மாதிரி மங்கலம் நடேசய்யர், பிரகதாம்பாள், பேபி கமலா முதலியோர் நடிக்கின்றனர்.

O

### பம்பாய் மெயில்

ஸ்ரீ ஹனுமான், புவனேஸ்வரி பிக்சர்ஸ் ஆகிய இரு ஸ்தாபனங்களின் கூட்டுத் தயாரிப்பு. ஈரோடு காளிதாஸ் பிலிம் ஸ்டுடியோவில் தயாராகிறது. கே. பி. கேசவன், டி. யஸ். பாலையா, யம். ஆர். ராதா, கொக்கோ முதலியோர் நடிக்கின்றனர். படம் சமீபத்தில் வெளிவரும்.

O

### 'நாடக கேசரி'

சென்னை ராயல் தியேட்டரில் சென்ற ஒன்றரை வருஷங்கட்கு அதிகமாகப் பல நாடகங்களை நவீன முறையில் நடத்தி வெற்றி பெற்ற மதுரை தேவி பால விநோத சங்கீத சபையாரின் கடைசிப் பட்டாபிஷேக நாடகத்திற்கு சென்னை மேயர் ஸ்ரீ வெங்கடசாமிநாயுடு தலைமைவகித்து, நவாப் ஸ்ரீ ராஜமாணிக்கத்துக்கு 'நாடக கேசரி' என்ற பட்டத்தை அளித்தார். ஸ்ரீ கிரி தம்பதிகள் சார்பில் அவருக்கு ஒரு வெள்ளிக் கோப்பையும் பரிசளிக்கப்பட்டது.

## கிட்டா செட்டியார்கள் சங்கம் அலோர் ஸ்டார்

சென்ற சித்திரை மாதம் 27உ (10-5-39) புதன்கிழமை இரவு 7-30 மணிக்கு ஷை சங்க நிர்வாக சபைக் கூட்டம் சங்கக் கட்டிடத்தில் தலைவர் திரு. சா. அரு. மெ. வள்ளியப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. 9 நிர்வாக அங்கத்தினர்கள் விஜயஞ் செய்திருந்தனர். 23-2-39 முதல் 8-5-39 வரையுள்ள வரவு செலவு கணக்குகள் வாசிக்கப் பெற்று ஒப்புக்கொள்ளப்பெற்றன. புது வருஷத்திற்கு லாயர் வைத்துக்கொள்வதென்றும் நமது சங்க வருஷப் பொதுக் கூட்டமும் ஆண்டு விழாவும் நாளது வைகாசி மாதம் 15உ (23—5—39ல்) நடத்துவதென்றும் தீர்மானிக்கப்பெற்றது. சங்க வரவு செலவு கணக்குகளை தணிக்கை செய்ய திரு. அழ. சி. த. ராம. அரு. ராம. ராமனாதஞ் செட்டியாரவர்களைத் தேர்ந்தெடுக்கப்பெற்றது.


ஜில்லா போர்டு தலைவர் சொல்வதைப் பாருங்கள்.

பாரதமாதா ஜெனரல் அஷ்யூரன்ஸ் கம்பெனியிலிருந்து சொர்ணத்தம்மாளுக்கு கொடுக்கவேண்டிய கிளைம் தொகை ரூபாய் 500-0-0க்கு இந்தியன் பாங்கு லிமிடெட் I/3 38/943830 நிர் செக் என் முன்னால் கொடுக்கப்பட்டது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

இக்கம்பெனியானது சொற்ப மூலதனத்துடன் ஆரம்பிக்கப்பட்ட போதிலும் தற்சமயம் போதிய நிதி சேர்த்து புதிய இன்ஷ்யூரன்ஸ் சட்டப்படி கவர்ண்மெண்டாரிடம் செக்யூரட்டி செலுத்தி பிஸ்னஸ் செய்ய முன் வந்திருப்பதால் பொது ஜனங்களின் ஆதரவைப் பெற்று கூடிய சீக்கிரத்தில் பிரபல லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளில் ஒன்றாக விளங்குமென நம்புகிறேன்.

21—4—39.
(Sd.) M. C. Veerabagu, B A, B.L,
Advocate,
President, Tinnevelly District Board.

ஏஜெண்டுகளும், ஸ்பெஷல் ஏஜெண்டுகளும் தேவை.
தாராளமான கமிஷன் கொடுக்கப்படும்.

பாரதமாதா ஜெனரல் அஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்,
தலைமை ஆபீஸ்:— 38, கிரேட் காட்டன் ரோடு, தூத்துக்குடி.
ஆர்கனைஸர்:— பலவான்குடி, இராமநாதபுரம் ஜில்லா.



WANTED 80 candidates of both sexes who after expert training as film artises and technicians are prepared to work for the College Film Company for two years on decent salary. Free hostel seat and other benefits. Illustrated Art Prospectus on 5 annas postage. Prabhat Movietone College, Bombay.



நீங்கள் உபாத்தியாயராயினும், அத்தியக்ஷகராயினும், பெரிய விவசாய நிபுணராயினும், வக்கீலாயினும், எழுத்தாளராயினும், பத்திரிகாசிரியராயினும், கற்பனைக்காரராயினும், பெரிய வியாபாரியாயினும், மாணவராயினும், சில சமயங்களில் உங்கள் மூளை உபத்திரவம் செய்ய ஆரம்பித்து விடுகிறது. தலைவலி உண்டாகிறது. இவ்வளவுக்கும் காரணம் சரீரம் உஷ்ணித்து கபாலம் வரை சூடேறி விடுவதே யாகும்.

இவ்விதம்

பகல் முழுவதும் வேலை செய்து ஓய்வடைந்த மூளைக்கும், சோர்வுற்ற கை—கால்களுக்கும், தளர்ச்சியுற்ற நரம்புகளுக்கும், உஷ்ணத்தால் நீத்துப்போன இந்திரியத்திற்கும் வலுவைக் கொடுத்து, சர்வ உஷ்ண ரோகங்களையும், வழுக்கை, கண்ணெரிச்சல், பித்தமயக்கம்—இளநரை முதலியவைகளை அறவே நீக்கி; குளிர்ச்சியையும், நல்ல ஞாபக சக்தியையும், முகவசீகரத்தையும் கொடுப்பது.

புதுக்கோட்டை
பாரத் சுகானந்தத் தைலம்
இன்றே பரீக்ஷியுங்கள்.

எமது தைலத்தை உபயோகித்த ஒரு டாக்டர் எழுதுவதை கவனியுங்கள்!

புதுக்கோட்டை பாரத் ஷர்பத் & வாஸனைதிரவிய உற்பத்தி சாலையாரால் தயாரிக்கப்படும் பாரத் சுகானந்தத் தைலத்தை நான் கடந்த மூன்று மாதங்களாக உபயோகித்து வருகிறேன். இத்தைலத்தை நான் உபயோகித்து வருவதிலிருந்து தெரிந்து கொண்டதென்ன வென்றால்:—இத் தைலம் நல்ல குளிர்ச்சியும், குணமும் கொடுப்பதோடு, கேசக் கோளாறுகளையும், மயிர் உதிர்தலையும், முக்கியமாக வழுக்கையையும் நீக்கி விடுகிறது. ஆகையால், இத்தைலத்தை பொதுஜனங்கள் தாராளமாக உபயோகிக்கலா மென்று நான் மனமகிழ்ச்சியுடன் சிபார்சு செய்கிறேன்.

மதுரை 3—4—39 (ஒப்பம்) R. கோபால கிருஷ்ணய்யர் L. M & S.

மேலும், எங்கள் பாக்டரியில் சாஸ்திரீக முறைப்படி தயாராகும்—ஹேர் ஆயில், ஸ்னோ, ஆல் பெயின்பாம், சரீர ஆரோக்கியத்திற்கு முதன்மை பெற்ற ஷர்பத் தினுசுகள் யாவும் தங்க மெடல்கள் பரிசு பெற்றவை.

தயாரிப்பவர்கள்:—
பாரத் ஷர்பத் & வாஸனைதிரவிய உற்பத்தி சாலை
புதுக்கோட்டை S. I. R.

எமது சாமான்கள் காரைக்குடியில் கிடைக்குமிடம்:— A. S. A. S. ஷண்முகம் ஸ்டோர்ஸ்,
கெமிஸ்ட்ஸ் & ஜெனரல் மெர்ச்செண்ட்ஸ், கல்லுக்கட்டி, காரைக்குடி.

## தனவணிகர்களுக்கு ஓர் வேண்டுகோள்

மதகுபட்டி ஸ்ரீ கா. கண. க. வே. வேலாயுதம் செட்டியார் அடியில் வருமாறு எழுதுகிறார் :—

சென்ற ஆண்டு ஏப்ரல் மாதத்தில் 'குமரன்' பத்திரிகையில் நாட்டுக்கோட்டை நகத்தார்களுக்கு ஓர் வேண்டுகோள் என்ற தலைப்பின் கீழ் நம்மவர்களில் பெண்ணுக்குத் தொகை கொடுத்து கல்யாணம் செய்துகொள்ள இயலாமல் தத்தளிக்கும் வாலிபர்கள் விஷயமாகச் சில வரிகள் எழுதியிருந்தேன். இதற்கு ஒத்துழைக்கும்படி வேண்டுகோள் விடுத்திருந்தேன். யாரும் இதைப்பற்றிக் கவனியாமலிருப்பது வருந்தத்தக்க விஷயம். நம் வாலிபர்களில் அநேகம் பேர் வெளிப்பிரதேசங்களுக்குச்சென்று அநேக நாகரீகங்களைக் கற்றுக் கொண்டு அதைக் காலப்போக்கையனுசரித்து அனுஷ்டானத்திற்கும் கொண்டுவருகின்றனர். ஆனால் பெண்ணுக்குத் தொகை கொடுத்து கலியாணம் செய்யும் பழய காலத்துப் பழக்கத்தை இன்னும் ஒழிக்கவழி தேடாமல் வாளாவிருப்பது மிகவும் கேவலமாக விருக்கிறது. இந்நிலையில் நம்மவர்களது பொருளாதார நிலைமையும் நாளுக்கு நாள் திருப்தியில்லாமலிருந்து வருவதால் அநேக வாலிபர்கள் மணம்செய்துகொள்ளமுடியாமலிருக்கிறார்கள். இக்கொடிய வழக்கத்தை உடனே நிறுத்தி விட வேண்டியதவசியம். இல்லாவிடில் நம் மரபு நாளுக்கு நாள் க்ஷீண மடைந்துவிடுமென்பதில் சந்தேகமில்லை. சில நாட்களுக்கு முன்பு கல்கத்தாவில் ஒருபெண் தன்னை மணம் செய்து கொடுப்பதற்கு வேண்டிய பணம் தன் தகப்பனாரிடம் இல்லை என்ற காரணத்தைக் கொண்டு தற்கொலை செய்து கொண்டதாகவும் அதனால் ஒரு காலேஜில் படித்து வரும் சுமார் ஆயிரத்தைநூறு பையன்களும் தாங்கள் தங்களது விவாகத்துக்கு பணம் வாங்குவதில்லையென்று பிரதிக்ஞை செய்து கொண்டார்களென்றும் பத்திரிகைகளில் படித்திருக்கலாம். நம்மரபு வாலிபர்களும் அங்கங்கே ஓரிடத்தில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் கூடி அம்மாதிரியே தாம் இனி எக்காரணத்தை முன்னிட்டும் பெண்ணுக்குத் தொகை கொடுத்து மணம் முடித்துக் கொள்வதில்லை என்று தீர்மானம் செய்து கொண்டால் பெண்ணைப் பெற்றவர்கள், கலியாணம் செய்து கொடுக்காமல் பெண்ணை வைத்துக் கொண்டு என்ன செய்வார்கள்? இப்பொழுதோ, கலப்புமணமும் விதவா விவாகங்களும் பரவிவருகின்றன. அதனால் பெண்ணுக்குத் தொகை கொடுக்காமலே கலியாணம் செய்து கொள்ளும்படியான காலம் கட்டாயம் வந்தே தீரும். இது விஷயத்தை நம்மரபு வாலிபர்களனைவோரும் அவ்வவ்விடங்களில் கூடி ஆலோசித்து உறுதியான முடிவு செய்வது மிக்க அவசியம். வீண் வேதாந்தம் பேசுவதில் பிரயோசனமில்லை. வாலிபர்கள் முன் வந்து மன உறுதியுடன் காரியம் செய்யவேண்டும். பழயன கழிதலும் புதியன புகுதலும் என்ற வாக்கியம் பழுதாகாமல் இது விஷயத்தில் பழய வழக்கத்தை உதறித் தள்ளிவிட்டு தற்கால நாகரீக உலக வழக்கத்தைத் தழுவி தைரியமாக முன் வந்து நடத்திக்காட்ட நம் வாலிபர்கள் முன் வர வேணுமாய்க் கேட்டுக்கொள்கிறேன்.

---

### காகிதத்தை உபயோகியாதே!

பட்சணங்கள், தின்பண்டங்களைக் காகிதத்தில் வைத்துக் கொடுக்கக்கூடாதென்று மெயின்டர் முனிஸிபல் போர்டு தீர்மானித்து உத்தரவிட்டிருக்கிறது.




(Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi (S. INDIA)

